

எஸ். திருவேங்கடம்.

# விளம்பரம்.

மெய்யன்புடைய ஐயன்மீர்!

இதனால் சகலமாணவர்களுக்கு மறிவிப்பது ஸ்ரீ காஞ்சிபுரம் வேதாந்ததருக்க இரத்னாகரம் ஸ்ரீமத் செங்கல்வராய முதலியாரவர்களால் ஸ்ரீ நாநாஜீவ வாத கட்டளைக்கு "சுபோதினி" என்னும்உரைஇயற்றப்பட்டது. இராயவேலூர் குபப்பேட்டை சீதாராம முதலியார் வீதி மண்டி S. திருவேங்கட முதலியாரவர்களின் பொருளுதவியினால் புத்தக ரூபமாக 10[illegible] காப்பிகள் அச்சிடப்பட்டன. அவைகள் முழுமையும் இந்நாலுரையாசிரியரவர்களுக்குக் குருகாணிக்கையாக சமர்ப்பிக்கப்பட்டன.

இப்படிக்கு,

**வேலூர் வேதாந்த விசாரணைச் சபையார்.**

மொழிவல்லார்க்கு நிரதிசயவின்ப
வடிவமுத்திப்பயனை யினிதளித்தற்ற
குதியுடையதென்பதூஉங்கையிலாமல
கமாம்.

அதற்குப்பல வுரைகள் வெளி
வந்துள வாயினும், தற்காலம் தர்க்க
வேதாந்த போதகாசிரியராய் விளங்கி
வருபவராயுள்ள காஞ்சிநகர் வித்வான்
ஸ்ரீமத் செங்கல்வராய முதலியாரவர்கள்
ாற் பலமுமுட்சுக்கள் குறுகித்தங்
கு வேதாந்த சிரவணத்தை முறை
புதவுமாவேண்ட அவர்கள் அவர்
து நாநாஜீவவாதக்கட்டளை முதல்
ாசிஷ்டமீருகச் செவ்வனே பயிற்றல்
வண்டுமென்னுங் கிருபை மேலீட்டி
னாலெங்குந் தேடியு மக்கட்டளையிற்
பலகிட்டாமையிற் பலர் வேண்டு
கோட்கிணங்கி யாவர்க்கும் பயனுறு
மாறு புதிதாக வதையச்சிட்டுக்
கொண்டார்கள்.



அவ்வாறச்சிடுங்கால், அவர்கள்
அரும்பதங்கட்குச் சுருங்கிய சொற்க
ளால் விளங்கியவுரையும், விருத்திப்
பிரபாகரம், தத்வாநுசந்தான முதலிய
மேனூல்கட்கவிரோதமாயுள்ள சுலப
மான சிறந்த பல லக்ஷணங்களு மெழு
திச் "சுபோதினி" என்னும் பெயரா
மைத்துளர்.

பின்பு வேலூர்வாசியும், அப்
பெரியாரது சிறந்த சீடரு ளொருவ
ரும், தானம், தயை. அடக்கம், த
ளாண்மை, கல்வி, பொறை பக்
சீர்த்தி, உயர்குடிப்பிறப்பு முத
நற்குண நற்செய்கைகளிற் சிறந்த
மாகிய ஸ்ரீமத் S. திருவேங்கட மு
யாரவர்கண் முன்வந்து யாவர்க்கு
பயனுறுமாறு அதையச்சுவாகனமே
றினார்கள்.

ஆகவே, தமது பெருங்கருணை
யினால், யாவருக்கு மினிதுணர் வுதிப்

## முகவுரை.

பத்தெள்ளிய செந்தமிழ் நடையினுரை
யியற்றிய பெருமைகூர் அவ்வித்வ
சிரோமணிகட்கும், அதையச் சுவா
கன மேற்றிப் பரோபகரித்த பெருந்
தகையாளர்க்கும் யாமனைவரும் என்
றும் மறவா நன்றிசெலுத்துங் கடப்
பாடுடையேம்.

இக்குறிப்புரை யாசிரியர், இம்
மைப்பயனாகிய புகழ், பொருளாதிய
வற்றைச் சிறிதுங் கருதாது, ஜிஞ்ஞா
சுக்களின் நன்மையொன்றையேகருதி
னை யியற்றத்திருவளாற் றாண்டப்
டு, இந்தச் சற்காரியத்திற் பிரவிர்த்
துள்ளாராகலின், அவர்விருப்பத்
படி யிதனைச் சற்குரு மூகமாய்ச்
த்தையோடு படித்துணர்வோர் சர்
துக்க நிவிர்த்திவடிவ பரமானந்தப்
பெருவாழ் வெய்துவாரென்பது திண்
ணம். சுபம். இங்ஙன்

**காஞ்சி. மாசிலாமணிஸ்வாமிகள்**
சப்எஞ்ஜினீர்.

உ

சிவமயம்.

ஸ்ரீ சற்குருப்யோ நம:

# சிறப்புப்பாயிரம்.

---

காஞ்சீபுரம் திருவருட் பிரகாச சபை
நிச்சல. இராமானந்த சுவாமியா
ரியற்றிய

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம் ள

1. மானிலம் பரவுந் தொண்டை
மண்டலத்தின் மகிமையார் காஞ்சிமா
நகரின், ஞானிக ளிலகும் பிள்ளைப்பா
ளையத்தி னற்கலை யாதிகள் பயின்றே,
மேனிலை யடைசெங் குந்தரிற் றிலகன்
மிளிர றுமுகன்றவச் சுதனாய்த்,தானெ
னும்.பொருளை யுணர்த்து வேதாந்த
தருக்கநூன் முதலிய„வுணர்ந்தே.

2. முத்தியை விரும்பும் புருடர்
களுணர்ந்தே முதற்பாடங் கேட்க
வேண்டியநூற், கத்திய வடிவ நாநா
சிவ வாதக்கட்டளைக்குரைபல ருரைத்
தா, ரத்தகையுரையி லிவ்வுரை தெளி
வா யறைந்துயிர் தனையுணர்ந் திலகப்,
பத்தியோ டளித்தான் செங்கல்வ
ராய பண்டி தனறிவின் மிக்கவனே.





திருக்கைலாய பரம்பரைத்
திருவாவடுதுறையாதீனத்துச்சிஷரும்
ஷை ஆதீனத்து மஹாவித்வான்
ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளை யவர்கள்
மாணாக்கரும்
தில்லைவிடங்கன் பிரபல வித்வான்
மாரிமுத்துப் பிள்ளையவர்கள்
புத்திர பிரபௌத்திரரும் ஆகிய
வெண்பாப்புலி

**ஸ்ரீ தி. சு. வேலுசாமிப் பிள்ளை**

அவர்களால் இயற்றப்பெற்ற

**சாற்றுக்கவி.**

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தளங்கொள்பொன் மாடத் தயங்கெ
ழிற்கச்சித் தனிநகர் தனினனி வாழ்
வோன், விளங்கொண்செங் கல்வ
ராயப்பே ரறிஞன் விழுமறை நூன்
முடி புணர்ந்தோன், வளங்கொள்

வே தாந்த மன்னுநா சிவ வாதக்கட்
டளைக்கொரு விளக்க, முளங்கொண்டி
யாரு முவட்புற வெழுதி யொளிர
வச்சினிற் பதித் தனனே.



காஞ்சிபுரம் பிள்ளையார்பாளையம்
**வித்வான் மணி திருவேங்கட**
**முதலியாரால் இயற்றப்பெற்ற**
எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய
விருத்தம்

நலந்தரு சான்றோர் நிலவெழிற் கச்சி
நகர்வயி னுயரயிற் குந்தர்
குலந்தரு மாறுமுகன்றவப் புதல்வன்
குலவுசெங் கல்வரா யப்பேர்ப்
பலந்தரு புனிதன் பலர்க்குப கா ரம்
பண்ணுபு பலகலை பயின்றே
புலந்தரு நாநா சிவ்வா தத்தின் [தே.
பொருள் விளக்கருளினன் புரித்



உ

சிவமயம்.

கணபதிதுணை

## 1. ஸ்ரீநாநாஜீவவாதக்கட்டளை.



### 2. காப்பு

ஆனைமுக னாறுமுக
னம்பிகைபொன் னம்பலவன்,
ஞானகுரு வாணியையு ணடு.

---

1. நாநா - பல, ஜீவ - பசுக்கள், வாதம் - உண்டென்றுகூறுதல், கட்டளை-முறைமை, எனவே, பல ஜீவர்களுண்டென்று கூறி, அத்தியாரோப அபவாதத்தால் அத்துவித சொரூபத்தை அதிகாரிக்குவிளக்கும் முறைமையையுடைய நூல் என்பது கருத்து. ஏக ஜீவவாதத்தைக் கூறின் பந்த மோக்ஷவிவஸ்தை (பாகுபாடு) எங்ஙனம் உண்டாகும்? என, மந்த அதிகாரிக்கு ஐயப்பாடுண்டாகு

மன்றோ? அதை நீக்குவான் கருதி ஆசிரியர் நாநா ஜீவவாதத்தைக் கூறினாரென்க. இதற்குப்பிரமாணம், "இனிமூலப்பிரகிருதியின் ரஜோகுணம்அனேகரூபமாய்ப்பிரிந்து அவித்தைகளென்றும், ஜீவகாரண சரீரங்களென்றும் சொல்லப்பட்டு, ஒன்றற்கொன்று தாரதம்மியமுள்ளவைகளாகஇருக்கும். இந்த அவித்தைகளிடத்திலும் மலின ஜலப் பிரதி விம்பம் போலப் பிரஹ்மசைதன்னியம் பிரதிவிம்பிக்கும் இந்தப்பிரதிவிம்பசைதன்னியங்கள்........................" என ஜீவாசிரயமாகிய அவித்தைகளை நாநாவாயும், அவற்றிற்றோன்றும் ஆபாசமாகிய பிரதிவிம்பசைதன்னியங்களை நாநாவாயும் ஆசிரியர்கூறியிருத்தலாம். இன்னும் பிருதக்தத்துவம், சமுதாயதத்துவம் ஆகிய இவைகளை ஆசிரியர் பிற்பகுதியிற் கூறியிருக்குமிடத்தையு முய்த்துணர்க. இதற்கு வேறு பொருள்கூறுவாருமுளர்.

2, காப்பு - காத்தல். அது இங்குக்காக்கின்ற கடவுள்விஷயமான வணக்கத்திற்குத் தொழிலாகு பெயர்.



3. சுத்தப் 4. பிரமமா யிருக்கின்ற 5. சர்வ 6. சாக்ஷியினிடத்திலே அக்கினியிற் சூடுபோல அபின்னமாக

---

3. சுத்தம் - மாயையும், அதன் காரியமுமான மலமின்றியதாயிருப்பது.

4. பிரஹ்மம் - பெரிதுக்கெல்லாம் பெரிதாயுள்ளது. அதாவது - பிருதிவியினும் பத்து மடங்கு அப்புப்பெரிது, அப்புவினும் பத்து மடங்கு தேயுபெரிது, தேயுவினும் பத்து மடங்கு வாயுபெரிது, வாயுவினும் பத்து மடங்கு ஆகாயம்பெரிது, ஆகாயத்தினும் பன் மடங்கு பிரகிருதி பெரிது, பிரகிருதி, சரீரத்துள்ள மச்சம்போலப் பிரஹ்மத்தின் ஏகதேசத்திலிருத்தலின் அதனினும் அனேக மடங்கு பிரஹ்மம் பெரிது, இதற்குப்பெரிது யாதொன்றுமில்லை என்பதாம்.

5. சர்வம் - சரீரத்திரயம், அபிமானத்திரயம், அவஸ்தாத்திரயம் ஆய இவை.

6. சாக்ஷி - விகாரமற்று உதாசீனமாயிருந்து புத்தி முதலியவற்றை விளக்குஞ் சைதன்னியம்; அஃதாவது, பிரமாதா (அம்

ஒரு சத்தி உண்டு; 7. அந்தச் சத்தி அவ் 8. வதீதப் பிரமத்தில் அடங்கியிருக்கும்போது அதற்குச்சுத்தப்பிரமமென்று பெயர். இந்தச்சத்தி 9. விசிரிம்பித்துச் சுத்தப்பிரமத்தை 10. வி

தக்கரண விசிஷ்ட சைதன்னியம்), பிரமாணம் (பிரமா ஞானத்திற்குக் கருவியாயுள்ளது), பிரமேயம் (பிரமாஞானத்திற்கு விஷயம்) முதலிய யாவையும் விளக்குவது என்பதாம். உலகின் கண் வாதிப்பிரதிவாதிகட்கு வேறானவனும், அவ்விருவாது கக்ஷியை நன்கு அறிபவனும், பக்ஷபாத மற்றவனுமாகிய புருஷன் சாக்ஷியெனப்படுவன். அதுபோற் பக்ஷபாதமின்றிப் புத்தி முதலியவனைத்தையும் விளக்குஞ்சைதன்னியம் சாக்ஷியெனப்படும்.

7. அந்தச்சத்தி - அந்த அபின்னசத்தி.

8. அதீதப்பிரஹ்மம் - மனோவாக்குக் கடந்த பிரஹ்மம். என்னை? நிர்க்குணமும், நிஷ்கிரியமுமாயிருத்தலின்.

9. விசிரிம்பித்து - வெளிப்பட்டு.



யாபிக்கும்போது அப்பிரமம் 11. பரை வியாபகத்துக்குள் ளிருந்தபடியினாலே அதற்குப் பரப்பிரமமென்று பெயராம். 12. இலக்ஷண சூன்யமாயிருக்கின்ற இந்தச் சத்திக்குப் பிரமத்தினுடைய சந்நிதானத்தில், புருடசமுகத்திலே ஸ்திரீக்கு இன்பஞ் சனித்தாற்போல 13. அவிகிர்த சத்துவ ரஜஸ் தமோகுணங்கள் உண்டாயின, இவற்றில் 14. சுத்த சத்துவத்திற்கு

10. வியாபிக்கும்போது - சூழ்ந்துகொள்ளும்பொழுது.

11. பரை - 'பராசத்தியினது' என, இன்சாரியைகொடுத்து ஆறன்உருபுவிரிக்க.

12. இலக்ஷணசூனியமாயிருக்கின்ற - பிரஹ்மத்தினும் வேறுவகை இலக்ஷணமின்றியிருக்கின்ற. இலக்ஷணம் - சிறப்புத்தர்மம்.

13. அவிகிர்த - நிர்விகாரமான; அதாவது, பிரபஞ்சரூபமான விகாரமின்றிய.

14. சுத்த - பிரகிருதியின் அசுத்தகுணக்கலப்பில்லாத. இவ்வாறே சுத்தராஜஸ்,

15. ஆநந்தரூப சத்தியென்று பெயர். சுத்த ரஜஸிற்குச் 16. சித்ரூப சத்தியென்று பெயர். சுத்த தமஸிற்குச் 17. சத்ரூப சத்தியென்று பெயர். இவற்றில், 18. காரணமான ஆனந்தரூப சத்தியுடனேபரப்பிரமங்கூடிச் 19. சர்வாநந்த மென்னுஞ் சுழுத்தி யவஸ்தை

சுத்த தமஸ் இவைகளிலுள்ள சுத்தம் என்னும் பதங்கட்கும் அர்த்தங்கொள்க.

15. ஆனந்தரூபசத்தி - இன்பவடிவ சத்தி. இது சிவத்திற்குக் காரண சரீரமாம்.

16. சித்ரூப சத்தி - பிரகாச வடிவ சத்தி. இது சிவத்திற்குச் சூக்ஷ்ம சரீரமாம்.

17. சத்ரூபசத்தி — இருப்பு வடிவ சத்தி. இது சிவத்திற்குத் தூல சரீரமாம்.

18. காரணம் - சாக்கிர சொப்பனங்கட்குச் சுழுத்தி காரணமானமையின், சுழுத்தியவத்தைவடிவ ஆனந்தரூபசத்தியைச் சத்ரூபசத்தி, சித்ரூபசத்திகட்குக்காரணமென்றார்.

19. சர்வானந்தம் — பூரணானந்தம். இது சிவசுழுத்தி.



யை யடைகின்றபோது பரப்பிரமமென்கின்ற பெயர் போய்ப் பரமாநந்தரென்கிற பெயர்வந்தது. இந்தப் 20. பரமாநந்தர் சித்ரூப சத்தியுடனே கூடிச் 21. சர்வப் பிரகாசமென்னுஞ் சொப்பனவஸ்தையை யடைகின்ற போது பரமாநந்தரென்னும் பெயர் போய்த் 22. தேசோமயரென்னும் பெயர் வந்தது. இந்தத் தேசோமயர் சத்ரூபசத்தியுடனே கூடிச் 23. சர்வ வியாபகமென்னுஞ் சாக்கிராவஸ்தையை யடைகின்றபோது தேசோமயரென்னும் பெயர் போய்ப் பரிபூரணரென்னும் பெயர் வந்தது. இந்த

20. பரமானந்தர் - மேலான இன்ப வடிவினர்.

21. சர்வப்பிரகாசம் - பூரணப்பிரகாசம். இது சிவசொப்பனம்.

22 தேஜோமயர் - ஜோதிவடிவினர்.

23. சர்வவியாபகம் - பூரணவியாபகம். இது சிவசாக்கிரம்.

24. அகண்டம் - கண்டிக்கப்படாதது.
இதனிலக்கணம்:— தேயத்தாலும், காலத்
தாலும், வத்துவாலும் அந்தமின்றியது.
(1) எது எல்லாவிடத்துமின்றி யா
தேனுமோரிடத்திருக்கின்றதோ அது தே
சத்தால் அந்தம் (முடிவு) உடையது. (உதா
ரணம்):— கடம். பிரஹ்மம் எங்கும் வியா
பித்திருத்தலாலும், சர்வதேசமும் பிரஹ்
மத்தில் மாயையாற்கற்பிக்கப்பட்டிருத்தலா
லும் தேயத்தாலந்தமுடைத்தன்று.
(2) எது உற்பத்திக்கு முன்னும் அழி
வுபாட்டிற்குப்பின்னும் இல்லையோ அது கா
லத்தாலந்த முடையது. (உதாரணம்):—
உடல் முதலியன. பிரஹ்மம் அவ்வாறின்மை
யின், காலத்தாலந்த முடைத்தன்று.
(3). எந்த வஸ்துவிற்கு அன்னியவஸ்
துக்களோடு பேதமுண்டாகிறதோ அந்த
வஸ்துவிற்குவஸ்துவாலந்தமுண்டு.
(உதாரணம்):—குடமுதலியன. பிரஹ்மம்
அவ்வாறின்றி எல்லாவற்றின் சொரூபமாயி
ருத்தலின் வஸ்துவாலந்த முடைத்தன்று.
நையாயிகன் அங்கீகரித்துள்ள பிருதிவியாதி



பரமாணுக்களில் அதிவியாப்தி நீக்குவான்
கருதித் தேசத்தாலந்த மின்றியது எனப்
பட்டது. ஆகாயமுதலியவற்றின் அதிவியா
ப்தி நீக்குதற்கு வஸ்துவாலந்த மின்றியது
எனப்பட்டது. அல்லது, சஜாதீய, விஜா
தீய, சுவகத பேத மின்றியது அகண்டம்.

(a) சஜாதீயபேதம் - சமான ஜாதி
யுடைய பொருள்களுக்குள்ள பே
தம்; பிராமண ரிருவருக்குள்ள
பேதம்போல.

(b) விஜாதீயபேதம் - விலக்ஷணஜா
தியுடைய பொருள்களுக்குள்ள
பேதம்; பிராமணனுக்குஞ் சூத்தி
ரனுக்குமுள்ள பேதம்போல.

(c) சுவகதபேதம் - அவயவங்களுக்கு
ஒன்றுக்கொன்றுள்ளபேதம்; பி
ராமணனின் கை, கால்களுக்கு
ள்ள பேதம்போல.

இவ்வாறு மூன்று பேதங்களுமின்றி
யிருத்தலின் பிரஹ்மம் அகண்டம்.
சாங்கியமதமுடையாரது ஆத்மாவின்
கண் அதிவியாப்தி நீக்குவான் கருதிச் சஜா
தீய பேதமின்றியதென்றும், ஆகாயமுதலி

யவற்றின்கண் அதிவியாப்தி நீக்குவான் கருதி, விஜாதீய பேதமின்றியதென்றும் கூறப்பட்டன. அல்லது அபரியாயமும், அனேகமும் ஆகிய சொற்களால் எவ்வஸ்து ப்பிரகாசிக்கப்படுவதாயும், விசிட்டபாவமில்லாததாயும் இருக்கின்றதோ, அவ்வஸ்து அகண்டம். தத்துவமஸி முதலான மஹாவாக்கியங்களிலுள்ளதத்துவமுதலிய சொற்கள் சக்கியார்த்தத்தின் வேறு பாட்டாற் பரியாயச் சொற்களல்லாதனவும், அனேகமுமாம். அவ்வாறான சொற்களாற் பிரஹ்மம் பிரகாசிக்கப்படுவதும், விசிட்ட பாவமில்லாததுமாம். இது பிரஹ்மத்தின் அகண்டத்தன்மையாம். குடம், கலசம் என்னுமனேகசொற்களாற்பிரகாசிக்கப்படும் குடத்தின்கண் அதிவியாப்தி நீக்குவான் கருதி அபரியாயம் என்றும், நீலம் உற்பலம் என்னும், அபரியாய அனேக சொற்களாற் பிரகாசிக்கப்படும் உற்பலத்தின்கண் அதிவியாப்தி நீக்குவான் கருதி விசிட்ட பாவமில்லாதது என்றுங்கூறப்பட்டன.

25. பரிபூரணம் - நிறைவு. இலக்கணம்:— தேசபரிச்சேதமின்றிய தன்மை; ஆகாயம்



நந்தப் பிரமத்தினிடத்திலே 27. சுத்தியில் ரஜதம்போல 28. மூலப்பிரகி

போல. அல்லது எல்லாவற்றிற்கும் சத்தாஸ்பூர்த்தியை (இருப்பு விளக்கத்தை) க் கொடுப்பது.

26. சச்சிதானந்தம் - சத்து + சித்து + ஆனந்தம். சத்து - மூன்று காலத்தும் பாதிக்கப்படாதது (பொய்யென்று நிச்சயிக்கப் படாதது).

சித்து - சூரியன், சந்திரன், நக்ஷத்திரம், அக்கினி, மின்னல் சத்தம், இந்திரியம், புத்தி, ஜீவன் ஆகிய நவப்பிரகாசங்களையும் அபேக்ஷியாமல், சுயம் பிரகாசமாயிருந்து கொண்டுசகலபிரபஞ்சங்களையும்விளக்குவது.

ஆனந்தம் - பரமப்பிரேமைக்கு விஷயமாயிருப்பது.

அல்லது, யாது எப்போதும் அநுகூலமாமோ, அங்ஙனமே "சுவ" சப்தத்தாற் பிரதிபாத்தியமாமோ (கூறப்படுவதாமோ) அது ஆனந்தம். ஈண்டுச்சுவசத்தத்திற்குப் பொருள் ஆன்மா. பாசிவம் ஆனந்த வடிவமன்றாயின் விடயத்தை நுகருங்காலத்து ஆனந்தந் தோற்றலாகாது.

ருதியென்னும் ஒரு சத்தி உண்டு. அந்த மூலப்பிரகிருதியும் 29. விகிர்த

---

27. சுத்தியில் ரஜிதம் - இங்குச் சத்கியாதி, அசத்கியாதி, ஆத்மக்கியாதி. அன்னியதாக்கியாதி, அக்கியாதி, அநிர்வசனீயக்கியாதி என ஆறுமதங்களுள: இவற்றுள், முன் ஐந்தும் பூருவபக்ஷம். ஈற்றிலுள்ளது சித்தாந்தபக்ஷம்.இவற்றின் விரிவை விருத்திப்பிரபாகரா முதலிய நூல்களிற் காண்க.

28. மூலப்பிரகிருதி - ஜகத்துக்குக் காரணமாயும், திரிகுணசாமியாவஸ்தா வடிவமாயுமிருப்பது. சாமியாவஸ்தை - ஏற்றத்தாழ்வின்றிய சமமான நிலைமை.

இது சத்து, அசத்து, சதசத்து, பின்னம், அபின்னம், பின்னாபின்னம், சாவயவம். நிரவயவம், சாவயவநிரவயவம் என்னும் ஒன்பது வித இலக்கணங்களாலுங் கூறமுடியாமையின், அநிர்வசனீயம் ஆம். இதன் விளக்கத்தை விருத்திப்பிரபாகரம் 8-வது பிரகாசத்திற் காண்க. உற்பத்தியின்மையின், அநாதியாம். இங்கு, 'சுத்தியில் ரஜதம் போலமூலப்பிரகிருதி என்னும் ஒருசக்தி உண்டு;



குணமாகிய முக்குணத்தோடு கூடியிருக்கும். அந்தப் பிரகிருதியின் சத்துவகுணத்தை 30. மாயையென்றும், 31. சர்வக்ஞ 32. வுபாதியென்றும், ஈசுரகாரண சரீரமென்றுஞ் சொல்லப்

---

என்றமையின், முன் அக்கினியிற்சூடுபோல அபின்னமாக ஒரு சக்தி உண்டு என்றது மித்தை அன்று என்க. இது சில நூலாசிரியரது கொள்கை.

29. விகிர்தகுணமாகிய - விகாரகுணமாகிய.

30. மாயை - யா + மா + சா. யா - யாதொன்று. மா - வாஸ்தவத்திலில்லையோ, சா - அது மாயை. இலக்கணம் - எது தன்னுடைய ஆசிரயத்துக்கு(ஈசுரனுக்கு) வியாமோகத் (மோகம்) தை விளைவிக்கின்றதில்லையோ அதுமாயையெனப்படும்.

31. சர்வக்ஞ உபாதி - சர்வக்ஞனுடைய உபாதி; அல்லது சர்வக்ஞனுக்கு உபாதி. என ஆறனுருபையாவது நான்கனுருபையாவது விரித்துப் பொருள் கொள்க.

32. உபாதி - ஈண்டு, உபாதி என்பது விசேடணம் என்னும் பொருளில் வந்தது.

விசேடணமாவது தன்னோடு வஸ்துவை அறிவிப்பது. குண்டலமுடையபுருஷன்வந்தானென்புழி, குண்டலம் புருஷனுக்கு விசேஷணம். என்னை? தன்னோடு புருஷனது வரவை அறிவிக்கின்றதாதலின்.

அங்ஙனமேமாயையோடு சைதன்னியத்தைச் சர்வக்ஞன், சர்வசக்திமான் முதலியவடிவமாக மாயையானது அறிவிக்கின்றதாகலின், ஈஸ்வரனுக்கு மாயைவிசேஷணம்.

உபாதி, உபலக்ஷணம் ஆகிய இவை வஸ்துவை அறிவிக்கினும் தம்முடன் வஸ்துவை அறிவிப்பனவாகா.

(a) உபாதியாவது:— தான் இருக்குமிடத்திலுள்ள வேறொருவஸ்துவை அறிவித்துக்கொண்டு தான் வேறாயிருப்பது. செவித்துளையிலிருக்கும் ஆகாயத்தினை நியாயநூலார் சுரோத்திரமென்பர். ஆண்டுச்செவித்துளை இருக்குமிடத்திலுள்ள ஆகாசத்தினைச் சுரோத்திரவடிவமாக அறிவித்துத்தான்வேறாயிருக்கின்றதாதலின், செவித்துளை சுரோத்திரேந்திரியத்துக்கு உபாதியாம்.

(b) உபலக்ஷணமாவது.— ஒன்றன்



படும். இந்த மாயையினிடத்திலே நிர்மல சலப்பிரதி விம்பம்போலப் பிரமம் 33. சுலட்சணமாகப் பிரதிவிம்பிக்கும். இந்தப் 34. பிரதி விம்பசைதன்னியம் சர்வக்ஞனாகிய 35. ஈசுர

---

சொரூபத்தில் ஏகதேச ஏககாலத்திலிருந்துகொண்டு வியாவர்த்தகஞ்செய்வது; அதாவது, வேறுபிரித்தறிவிப்பது. காகம் உட்கார்ந்திருப்பது தேவதத்தன் வீடு என்புழி, வீட்டுக்குஉபலக்ஷணம் காகம். என்னை? வீட்டின் ஏகதேசத்தும், ஏககாலத்துமிருந்துகொண்டு வியாவர்த்தகஞ் செய்வதாகலின்.

33. சுலக்ஷணமாக - வியக்தமாக.

34. பிரதி விம்பசைதன்னியம் - பிம்பத்தைப் போன்றவேறோர் சைதன்னியம். இங்குப்பிரதிவிம்பசைதன்னியத்தை ஈசுரன் என்று கூறினாராயினும், அதிஷ்டானஆசிரய சகித பிரதி விம்பசைதன்னியம் ஈசுரன் என்று பொருள்கொள்க. கொள்ளாக்கால், பாகத்தியாகலக்ஷணைக்கு விரோதமுண்டாமென்றறிக. அவித்தையிற்றோன்றும் பிரதி விம்பம் ஜீவன் என்று கூறுமிடத்தும்

னென்று சொல்லப்படும். இந்தச் சத்துவகுண மாயையினிடத்திலே சத்துவத்தில் சத்துவம், சத்துவத்தில் ரஜஸு, சத்துவத்தில் தமஸு என மூன்றுகுணங்கள் உண்டு. இவைகளில், சத்துவத்தில் சத்துவம் பிரதானமாகும்போது, அதில் பிரதிவிம்பித்த ஈசுரன் சகத்தை இரக்ஷிக்கையினால் விஷ்ணுவென்றும், சத்துவத்தில் ரஜஸு பிரதானமாகும்போது, அதில் பிரதிவிம்பித்த ஈசுரன் சகத்தைச் சிருஷ்டிக்கையினால் பிரமாவென்றும், சத்துவத்தில் தமஸு பிரதானமாகும்போது,

---

இவ்வாறே பொருள் கொள்க. ஈண்டு அதிஷ்டானம், ஆசிரயம், ஆபாசம் மூன்றும் ஈசுரனுக்கும் ஜீவனுக்கும் சொரூபமென்றறிக.

35. ஈசுரன் - ஐசுவரிய சம்பன்னன்.

÷ இவன் சர்வக்ஞனும் (முற்றறிவுடையவனும்) சர்வசக்திமானும் (முழுவல்லமையுள்ளவனும்) சுதந்திரனும் (பராதீனமாகாதவனும்) ஆவன்.



அதில் பிரதிவிம்பித்த ஈசுரன் சகத்தை உபசம்மாரம் பண்ணுகையினால் உருத்திரனென்றுஞ் சொல்லப்படுவன். இப்படி மூலப்பிரகிருதியின் சத்துவகுண 36. கற்பனை சொல்லப்பட்டது.

இனி மூலப் பிரகிருதியின் இர

---

36. கற்பனை - ஆரோபம். அத்தியாசம்' கற்பனை, ஆரோபம் என்பன ஒருபொருளன.

இலக்கணம்:—ஒன்றின்கண் (கயிற்றின்கண்) மற்றொன்றின் (சர்ப்பத்தின்) அவபாசம் (தோற்றம்) அத்தியாசம். ஞானாத்தியாச அர்த்தாத்தியாச பேதத்தால் அவ்வத்தியாசம் இருவகைத்து. ஞானாத்தியாச பக்ஷத்தில் அவபாச பதத்தாற் பிராந்திஞானத்தைக்கொள்க. அர்த்தாத்தியாச பக்ஷத்தில் அவபாச பதத்தால் பிராந்தி ஞானத்திற்கு விஷயமான இரஜதமுதலிய பொருள்களைக்கொள்க. ஞானாத்தியாசமாவது, அத்தர்மரகித பதார்த்தத்தில் அத்தர்மமுடைய புத்தி.

உதாரணம்:—வெள்ளித் தன்மையில்லாத சுத்தியின்கண் வெள்ளித்தன்மைப்புத்தியும், ஆன்மத்தன்மையில்லாத ஆகத்தின்கண் ஆன்மத்தன்மைப் புத்தியும் ஆம்.

அர்த்தாத்தியாசமாவது பிரமாண அஜன்னிய(பிரமாணத்தாற்றோன்றாத)ஞானத்திற்கு விஷயமும் பூர்வ திருஷ்டத்துவதருமத்திற்கு (முன்பார்த்துள்ள தன்மைக்கு) அனதிகரணமு (இடமில்லாதது)மான பொருள். இப்பியின்கண் வெள்ளியை விஷயஞ்செய்யும் இது வெள்ளியென்னு முணர்ச்சி, அப்பிரமையானமையின் ஓர் பிரமாணத்தானும் ஜன்னியமன்று. ஆதலால்அவ்வெள்ளி பிரமாண அஜன்னியஞானத்திற்கு விஷயமாயும், தனது தோற்றாவிற்குமுன்னில்லையாதலின் பூர்வ திருஷ்டத்துவ தருமத்திற்கு அனதிகரணமுமாயு மிருக்கின்றது. ஆகவே அவ்வெள்ளியின்கண் அர்த்தாத்தியாசத்தன்மை அமையும். இத்தகைய அர்த்தாத்தியாச இலக்கணத்தைப்பிறவிடங்களினும் உய்த்துணர்க. இதுபிராதிதிகம், வியாவகாரிகமென இருவகைத்து. பிராதீதிகமா



ஜோகுணம் 37. அநேக ரூபமாய்ப்

---

வது ஆகந்துக (செயற்கை) தோஷத்தாற்றோன்றும் பொருள்.

உதாரணம்.—சுத்தியில் வெள்ளி, கயிற்றரவு இவை ஆகந்துக தோஷத்தாற்றோன்றுவன. ஆகவின் பிராதிதிக அர்த்தாத்தியாசமேயாம். ஆகந்துக தோஷம் பிரமாத்ருதோஷம், விஷயதோஷம், கரணதோஷமென மூவகைத்து.

பிரமாத்ரு (அந்தக்காண விசிஷ்டசைதன்னியம்) தோஷமாவன இராகம், பயமுதலியன.

விஷயதோஷமாவன சாதிருசிய (ஒப்புமை) முதலியன.

கரண (பொறி) தோஷமாவன காசம், காமாலை முதலியன.

வியாவகாரிகமாவது ஆகந்துக தோஷத்தாற்றோன்றும் பிராதிதிகப் பொருள்களினும் வேறானது.

உதாரணம்:—ஆகாயமுதலியன.

37. அனேக ரூபமாய் - அம்சத்தால் பலவடிவமாய். இரஜோகுண மென்னு மவி

பிரிந்து 38. அவித்தைகளென்றும், சீவ 39. காரண சரீரங்களென்றும் சொல்லப்பட்டு ஒன்றற்கொன்று தாரதம்மியமா இருக்கும் இந்த அவித்தைகளிடத்தி

---

த்தைமலினத்தன்மையின் விசித்திரத்தாற் பலதிறப்படும். ஆகவின் அவ்வவித்தையிற் பிரதிவிம்பித்துள்ள சைதன்னியங்களும் பலதிறத்தன. 38. அவித்தைகளென்றும் என்பதில் அவித்தை - வித்தையினால் நாசமாவது. ஈண்டு அகரம் விரோதப் பொருளில் வந்தது.

இலக்கணம்:—எது தன்னுடைய ஆசிரயத்திற்கு (ஜீவனுக்கு) வியாமோகத்தை விளைவிக்கின்றதோ அது அவித்தை.

39. காரணசரீரம் என்பதிலுள்ள சரீரசப்தத்திற்குப் பொருள் தத்வக்ஞானத்தால் ஜீரணித்துப் போவது என்பதாம்.

காரணம் - தூல சூட்சுமங்கட்குக்காரணம்.

தமோகுணப்பிரதானபிரகிருதியின் காரியமாயஸ்தூலமுதலிய சரீரங்கட்கு அவித்தையைக்காரணமாக நாம் கூறியது, அது (அவித்தை) பிரகிருதியின் அவஸ்தாவிசேஷமாயிருத்தலின் உபசாரம்பற்றியென்க.



லும் மலினசலப் பிரதிவிம்பம்போலப் பிரம சைதன்னியம் பிரதிவிம்பிக்கும். இந்தப்பிரதிவிம்ப சைதன்யங்கள் 40 கிஞ்சிக்ஞரென்றும், சீவ 41. சிதாபாசரென்றும், 42. பிராக்ஞரென்றுஞ்சொல்லப்படும். இந்த அவித்தைகளிடத்திலேயும் ரஜஸில்சத்துவம், ரஜஸில் ரஜசு, ரஜஸில் தமசு என மூன்றுகுணங்கள் உண்டு. இரஜஸில் சத்துவம் பிரதானமாகும்போது அதில் பிரதிவிம்பித்த சிதாபாசன் 43. தத்துவக்ஞாந

---

40. கிஞ்சிக்ஞர் - அற்பஅறிவினையுடையவர்.

41. சிதாபாசர் - சித்துப்போலத் தோன்றிச்சித்திலக்கணமில்லாதவர். இந்தச்சிதாபாசர் அற்பக்ஞரும், அற்பசக்திமானும், பராதீனருமாவர்.

42. பிராக்ஞர் - பிரகிருஷ்டமான (மிக்க) சுயம்பிரகாசவடிவ ஆநந்தாத்மாவில் அஞ்ஞானவிருத்தியாகிய ஞானம் எந்தச்சுழுத்தியபிமானருக்கிருக்கின்றதோ அவர்பிராஞ்ஞர்.

நிஷ்டனாவன். இரஜஸில் ரஜசுபிரதானமாகும்போது அதில் பிரதிவிம்பித்த சிதாபாசன் காமக்குரோதபரனாய்க் 44. கர்மநிஷ்டனாவன். இரஜஸில் தமசுபிரதானமாகும்போது அதில் பிரதிவிம்பித்த சிதாபாசன் சோம்பல், நித்திரை, மயக்கம் ஆகிய இவைகளையடைவன்; இப்படி மூலப்பிரகிருதியின் இரஜோகுண கற்பனை சொல்லப்பட்டது.

இனி மூலப்பிரகிருதியின் தமோகுணத்திற்கு ஆவரணம், விக்ஷேபம் என இரண்டு சத்திகள் உண்டு. இவ்விரண்டில் 45. ஆவரண சத்தியானது தத்துவஞானியையும், ஈசுரனையுந்தவிர

---

43. தத்துவக்ஞானநிஷ்டன் - விவேகாதிசிரவணாதிவடிவ தத்துவக்ஞானசாதனங்களில் நிலை பெற்றவன்.

44. கன்மநிஷ்டன் - இகபரலோகங்கட்கு ஏதுவான உழவாதிவேள்வியாதிகருமங்களில்நிலை பெற்றவன்.



மற்றைச் சீவருக்கெல்லாம் சரீரத்திரயம், சிதாபாசன், சாக்ஷி சைதன்னியம் என்னுமிவைகளின் ஒன்றற்கொன்றுள்ள பேதந்தெரியவொட்டாமல் மறைக்கும். இதனால் மறைபட்ட சீவர் 46. இருபத்தொன்பது தத்துவங்களையும் ஒருமைப்பாடாக நானென்றபிமானிப்பர். இந்த அபிமானம் 47. அகங்காரக் கிரந்தியென்றும், 48. சம்சார பந்தமென்றுஞ் சொல்லப்ப

---

45. ஆவரணம் - நாஸ்தி(பிரஹ்மமில்லை), நபாதி (பிரஹ்மம்விளங்கவில்லை) என்னும் விவகாரத்திற்கு ஏதுவாயிருப்பது. ஆவரணம் - மறைப்பு.

46. இருபத்தொன்பது தத்துவங்களாவன - தூலசரீரதத்துவம் ஆறு, சூக்ஷமசரீரதத்துவம் இருபது, காரணசரீர தத்துவம் ஒன்று, சிதாபாசன் ஒன்று, சாக்ஷி சைதன்னியம் ஒன்று என்பனவாம்.

47. அகங்காரக் கிரந்தி - அகங்காரமாகிய முடிச்சு.

டும். 49. சற்குரு கடாக்ஷத்தினாலே இந்த ஆவரணம் நீங்கி இருபத்தொன்பது தத்துவங்களின் ஒன்றற்கொன்றுள்ள 50. பேதந்தெரிகின்றதே முத்தி; இப்படி ஆவரணசத்தியின் காரியஞ்சொல்லப்பட்டது.

---

48. சம்சாரபந்தம் - சம்சாரமாகியகட்டு.

49. சற்குரு - சத்தையுபதேசிப்பவர். குரு - கு + ரு. கு - அஞ்ஞானம். ரு - ஞானம்; எனவே, ஞானத்தால்அஞ்ஞானத்தை யொழிப்பவர் என்பதாம். இலக்கணம்; - சுரோத்திரிய பிரஹ்மநிஷ்டர்குருவாம். சுரோத்திரியர் - சகல சாஸ்திரவிற்பன்னர். பிரஹ்ம நிஷ்டர் - அங்கை நெல்லிக்கனி போல் அகண்ட ஏகரச ஆனந்த அனுபவமுடையவர்.

50. பேதந்தெரிகின்றதே முத்தி; ஈண்டுவேற்றுமையையறிவதா லுளதாம் ஞானத்தின் பயனாய முத்தியை, "பேதந்தெரிகின்றதே முத்தி" யென்றது, வேற்றுமையையறிதலாகிய காரணமிருப்பின் காரிய



இனி 51. விக்ஷேபசத்தியினின்றும் சத்த தன்மாத்திரையான ஆகாசந்தோன்றிற்று. ஆகாசத்தினின்றும் பரிச தன்மாத்திரையான வாயு தோன்றிற்று. வாயுவினின்றும் ரூப தன்மாத்திரையான அக்கினிதோன்றிற்று. அக்கினியினின்றும் ரஸ தன்மாத்திரையான அப்புத்தோன்றிற்று. அப்புவினின்றும் கந்த தன்மாத்திரையான பிருதிவிதோன்றிற்று. இந்தச்சூக்ஷ்ம பஞ்சபூதத்திற்குக் காரணமாயிருக்கின்ற விக்ஷேபசத்தியினிடத்திலே தமஸில் சத்துவம், தமஸில் ரஜஸ், தமஸில் தமஸ் என்னுமிவை அற்பங்கருவாக விருந்தபடியால், அதன்காரியமாகிய இந்தத் தன்மாத்திரைகளான பஞ்சபூதங்களும் முக்குணங்களுடனே பிறந்தன. இந்தப் பஞ்சபூதங்கட்குத்

---

மாயமுத்திகிட்டுவது தவறாதென்னுந் துணிவுபற்றி யென்க.

52. தன்மாத்திரைகளென்றும், 53. அபஞ்சீகிருத பூதங்களென்றும், 54. சூக்ஷ்ம பூதங்களென்றும், 55. முக்குண பூதங்களென்றும் சாஸ்திரங்களில் நாமஞ்சொல்லப்படும்.

இந்தச் சூக்ஷ்ம பூதங்களினின்றும் சூக்ஷ்ம சரீரங்களும், ஸ்தூல பூதங்களுந் தோன்றும். அஃதெங்ஙனமெனின்:-ஆகாச முதலான பஞ்சபூத

---

51. விக்ஷேபம் - ஆகாயமுதலிய பிரபஞ்சத்தோற்றத்துக்கு ஏதுவாய சத்தி. விக்ஷேபம் - தோற்றம்.

52. தன்மாத்திரை - கலப்பின்றித்தான்மாத்திரமாயிருப்பது.

53. அபஞ்சீகிருதபூதம் - பஞ்சீகரணஞ்செய்யப்படாத பூதம்.

54. சூக்ஷ்மபூதம் - நுண்ணியபூதம்.

55. முக்குணபூதம் - தமசில் சத்துவம், தமசில் இராஜசு, தமசில் தமசு என்னும் மூன்று குணங்களுந்தொடர்ந்துள்ள பூதங்கள்.



ங்களின் சத்துவாம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரையெடுத்து ஒன்றாகக் கூட்டிவைத்தது 56. அந்தக்கரணம். இந்த அந்தக்கரணத்தில் ஆகாசத்தின் அம்சங் கூடினதற்கடையாளம், இந்த அந்தக்கரணமும் ஆகாசத்தைப்போலச்சகலமான 57. கேள்விக்கும் இடங்கொடுத்துத் தரிக்கின்றது. இப்படித் தரிக்கின்ற விருத்திக்கு உள்ளமென்று பெயர். இந்த அந்தக்கரணத்தில் வாயுவி னம்சங்

---

56. அந்தக்கரணம் - உட்கருவி. இதனை நையாயிகர் அணுவென்பர். மீமாம்சகர் முதலியோர் விபுவென்பர். இவற்றின் கண்டனத்தை அத்வைதசிந்தாகௌஸ்துபம், நியாயப்பிரகாசமுதலிய நூல்களில் முறையே காண்க. வேதாந்த சித்தாந்திகள் அந்தக்கரணத்தை மத்தியமபரிமாணமென்பர். அணுப்பரிமாணமும் விபுப்பரிமாணமு மல்லாததை மத்தியம பரிமாணமென்றுகூறுப.

கூடினதற்கடையாளம், இந்த அந்தக்கரணமும் வாயுவைப்போல அலைகின்றது. இப்படி அலைகின்ற விருத்திக்கு 58. மனமென்று பெயர். இந்த அந்தக்கரணத்தில் அக்கினியினம்சங்கூடினதற்கடையாளம், இந்த அந்தக்கரணமும் அக்கினியைப்போல ஈதின்னதென்று விளக்குகின்றது. இப்படி விளக்குகின்ற விருத்திக்குப் 59. புத்தியென்று பெயர். இந்த அந்தக்கரணத்தில் அப்புவினம்சங் கூடினதற்கடையாளம், இந்த அந்தக்கரணமும் அப்புவைப்போல விஷயங்களிற்பற்றி

---

57. சகலமான கேள்விக்கும் - கேட்கத்தக்க கல்விகளனைத்தும் தங்கி நிற்றற்கு. உள்ளத்திற்கு அதிதெய்வம் - சதாசிவம்.

58. மனம் - சங்கற்பவிருத்தியுடைய அந்தக்கரணம். அதிதெய்வம் - சந்திரன்.

59. புத்தி - நிச்சயவிருத்தியுடைய அந்தக்கரணம். அதிதெய்வம் - சதுர்முகன்.



இழுக்கின்றது. இப்படி இழுக்கின்ற விருத்திக்குச்60. சித்தமென்றுபெயர். இந்த அந்தக்கரணத்தில் பிருதிவியினம்சங் கூடினதற்கடையாளம், இந்த அந்தக்கரணமும் பிருதிவியைப்போலக்கடினமாக நின்று நானென்றபிமானிக்கின்றது: இந்த அபிமானவிருத்திக்கு 61. அகங்காரமென்று பெயர்.

இன்னும் ஆகாசமுதலான பஞ்சபூதங்களினுடைய சத்துவாம்சத்திலே பூதத்திற்கொவ்வொரு மாத்திரை யெடுத்துத் தனித்தனியே வைத்தது சுரோத்திராதி 62. ஞானேந்திரியமெ

---

60. சித்தம் - ஸ்மரணவிருத்தியுடைய அந்தக்கரணம். அதிதெய்வம் - அச்சுதன்.

61. அகங்காரம் - அபிமானவிருத்தியுடைய அந்தக்கரணம். அதிதெய்வம் - சங்கரன்.

62. ஞானேந்திரியம் - அறிகருவி. இந்திரியம் - சுருதியால் இந்திரனென்றுபெய

ன்றுசொல்லப்படும். இவைகளில், 63 சுரோத்திரம் ஆகாசத்தினம்ச மான படியால் ஆகாசத்தின் குணமான சத்தமாத்திரத்தை அறியும். 64 துவக்கு வாயுவினம்சமானபடியால் வாயுவின் குணமான பரிசமாத்திரத்தை அறியும். 65. சக்ஷு அக்கினியினம்ச மானபடியால் அக்கினியின் குணமான ரூபமாத்திரத்தை அறியும்.

---

ரிடப்பட்ட ஆன்மாவோடு இயைபுடையது. இந்திரன் - மேலான ஐசுவரியத்தையுடையவன்.

63. சுரோத்திரம் - சப்தஞானத்திற்குச்சாதனமான இந்திரியம். அதிதெய்வம் - திக்கபிமானதேவதை.

64. துவக்கு - ஸ்பரிசஞானத்திற்குச் சாதனமான இந்திரியம். அதிதெய்வம் - வாயுஅபிமானதேவதை.

65. சக்ஷு - உருவஞானத்திற்குச் சாதனமான இந்திரியம். அதிதெய்வம் - ஆதித்தன்.



66. சிங்குவை அப்புவினம்சமான படியால் அப்புவின் குணமானரச மாத்திரத்தை அறியும். 67. கிராணம் பிருதிவியினம்ச மானபடியால் பிருதிவியின்குணமான கந்தமாத்திரத்தை அறியும். இப்படி ஐந்தும் ஒன்றோடொன்று கூடாதபடியால் ஒன்று மற்றொன்றின் குணத்தைக் கிரகிக்கவறியாது. அந்தக்கரணத்தில் ஐந்து மாத்திரையும் ஒன்றாய்க்கூடினதுகொண்டு ஐந்திந்திரியங்களினாலும் ஐந்து விடயங்களையும் அறியும். இந்தச் சத்துவ குணத்திலுண்டான அந்தக்கரண

---

66. சிங்குவை - இரசஞானத்திற்குச் சாதனமான இந்திரியம். அதிதெய்வம் - வருணன்.

67. கிராணம் - கந்தஞானத்திற்குச் சாதனமான இந்திரியம். அதிதெப்வம் — அஸ்வினி அல்லது பிருதிவியபிமானதேவதை.

ம்ஐந்தும், ஞானேந்திரியம் ஐந்தும், ஆகப் பத்தும் சத்துவாம்சமானபடியால் ஞானசாதனமாயின.

இன்னும் ஐந்து பூதங்களினுடைய இராஜதாம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொரு68 மாத்திரையெடுத்து ஒன்றுக்கூட்டிவைத்ததுவியானாதி பஞ்சவாயுக்கள். இவைகளில், 69வியானவாயு ஆகாசத்தினம்சமானபடியால் ஆகாசத்தைப்போலச் சர்வாங்கமும் வியாபித்திருக்கும். 70. பிராணவாயு வாயுவினம்சமானபடியால் வாயுவைப்போல இருதயத்திலிருந்து நாசிகாதிபரியந்

68. மாத்திரை - அம்சம்.

69. வியானவாயு - எல்லாப்புறங்களிலுஞ்செல்லுதலையுடைய வாயு. அதிதெய்வம் - அகோரன்.

70. பிராணவாயு - எட்போதும் மேற்செல்லுதலையுடையவாயு. அதிதெய்வம் - சத்தியோஜாதன்.



தம்அலையும். 71.அபானவாயு அக்கினியினம்சமானபடியால் அக்கினியைப்போலச்சாடராக்கினியாகஉஷ்ணித்துக்கொண்டு குதத்தைப்பற்றிநின்று உண்டவன்னபானாதிகளைச் சீரணிப்பிக்கும்72. சமானவாயு அப்புவினம்சமானபடியால் சரீர நடுவானநாபித்தானத்தினின்று உண்டஅன்னரசங்

71. அபானவாயு - கீழ்ச்செல்லுதலையுடையவாயு. அதிதெய்வம் - வாமதேவன்.

72. சமானவாயு-உண்ணப்பட்டஅன்னமுதலியவற்றின் தூலம், மத்திமம், சூக்ஷ்மம்என்னும்மூன்று பகுதிகளை அவ்வவ்விடங்களில் அடையச்செய்யும் வாயு. மலமுதலியவைகட்கு எதுவாகிய அன்னஜலங்களின் தூலப்பகுதியைச் சரீரத்தினின்று வெளியிற்றள்ளும்பொருட்டு அபானனில் அடைவிக்கின்றது. தசைஇரத்தங்களுக்குஏதுவாகிய அன்னஜலங்களின்மத்திமப்பகுதியை நாடிவாயிலாக எல்லாஅங்கங்களிலுமடைவிக்கின்றது. மனம், பிராணன்என்னு மிரண

களை அப்புவைப்போலஇழுக்கும். 73. உதானவாயு பிருதிவியினம்சமானபடியால் கண்டத்தைப்பற்றிப் பிருதிவியைப் போலக்கடினமாகநின்று உண்டஅன்னபானாதிகளைக்கடையும். இந்தப் பஞ்சவாயுக்களையுமல்லாமல் வாந்திபண்ணுவிக்கின்றது நாகனென்றும், இமைத்து விழிப்பிக்கின்றது கூர்மனென்றும், குறுகுறுத்துத் தும்மச் செய்கின்றது கிரிகரனென்றும்,



கொட்டாவிகொள்ளச் செய்கின்றது தேவதத்தனென்றும், வீங்கச்செய்கின்றது தனஞ்சயனென்றும் வேறே ஐந்து வாயுக்களுண்டென்று சிலர் சொல்லுவார் இவ்வைந்தும் பிராணனுடைய தொழிலானபடியால் 74. வேறல்ல.

இன்னும் ஆகாயமுதலிய பஞ்சபூதங்களினுடைய இரஜோம்சத்

---

...டையுமுபகரிப்பவாகிய அன்னஜலங்களின் சூக்ஷ்மப்பகுதியை அம்மனம்பிராணன் என்பவற்றில் முறையேயடைவிக்கின்றது. இதனாற்றான் மனம் அன்னமயமெனவும், பிராணன் ஜலமயமெனவுஞ், சுருதிகூறுகின்றது. இச்சமானவாயுவும் சரீரமுழுவதுமிருக்கின்றது. இந்நூலில் முக்கியத்தன்மைபற்றி அதற்குநாபிஸ்தானம்பற்றுக்கோடாகக்கூறப்பட்டது. அதிதெய்வம் - ஈசானன்.

73. உதானவாயு - மரணகாலத்தில்மேற்செல்லுதலையுடையவாயு. அதிதெய்வம் - தற்புருஷன்.

74. வேறல்ல - பிராணன்முதலானஐந்து வாயுவிலும் நாகன் முதலாய ஐந்து வாயுவைவேறாகஒப்புவதில்கௌரவ(மிகைபடக்கூறல்) தோஷமுண்டாவது ஒன்று, அவை உண்டு என்பதில் சுருதியாதிபிரமாணங்களில்லாமை மற்றொன்று. ஆகலின் அவ்வைந்தும் பிராணன் முதலானவைகளில் அடங்கியவென்று தத்துவானுசந்தானத்திற் கூறப்பட்டிருக்கின்றன ஈண்டுப்பிறன்கோட் கூறல்என்னுமுத்திபற்றி அந்நாகன்முதலியவாயுக்களைக்கூறிமேற்சுருதிக்கேற்கவேறல்லஎன்றுமறுத்தார் என்க.

திலே பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரையெடுத்துத் தனித்தனியே வைத்தது வாக்காதி 75 கர்மேந்திரியமென்று சொல்லப்படும். இவைகளில் 76. ஆகாசத்தினிடமாக 77. வாக்கு வசனிக்கும். வாயுவினிடமாகப் 78. பாணி இடுதல் ஏற்றல் செய்யும். அக்கினியினிடமாகப் 79. பாதம் நடக்கும். அப்புவினிடமாகப் 80. பாயுருமலசலாதிகளை வெளியிலே தள்ளும்.

75. கருமேந்திரியம்- தொழிற்கருவி.

76. ஆகாசத்தினிடமாக - ஆகாசத்தை யாதாரமாகக்கொண்டு.

77. வாக்கு- வசனிக்குங்கிரியைக்குச் சாதனமான இந்திரியம். அதிதெய்வம் - வன்னி

78. பாணி -ஏற்றற்கிரியைக்குச்சாதனமான இந்திரியம். அதிதெய்வம் -இந்திரன்.

79. பாதம் -செல்லுங்கிரியைக்குச்சாதனமான இந்திரியம். அதிதெய்வம் - உபேந்திரன் (விஷ்ணு)



பிருதிவியினிடமாக 81. உபஸ்தம் சுகத்தைப்பண்ணும்; இந்த ஐந்துந் தனித்தனியே இருந்ததுகொண்டுமொறு தொழில் செய்யமாட்டா. வியானாதி வாயுக்கள் ஐந்து மாத்திரையும் ஒன்றாய்க் கூடினது கொண்டு கர்மேந்திரியம் ஐந்தின்வழியினாலும் ஐந்து தொழில்களையுஞ்செய்துமுடிக்கும். இந்த வாயுக்களைந்தும், கர்மேந்திரியங்களைந்தும் ஆகப்பத்தும்இராஜோம்சமானபடியினால்கிரியாசாதனமாயின. அந்தக்கரணம்5, ஞானேந்திரியம் 5, வாயுக்கள் 5, கர்மேந்திரியம் 5, ஆகஇருபது தத்துவமுஞ் 82 சூக்ஷ்மம சரீரமென்று

80. பாயுரு - விடுதற்கிரியைக்குச்சாதனமான இந்திரியம். அதிதெய்வம் - மிருத்யு (யமன்)

81. உபஸ்தம் - சுகக்கிரியைக்குச்சாதனமான இந்திரியம்.அதிதெய்வம்-பிரஜாபதி (பிரமன்)

சொல்லப்படும். இந்தச் சூக்ஷ்ம சரீரத்தை மாயாப்பிரதிவிம்பனாகவிருக்கின்ற ஈசுரன், அவித்தையாப் பிரதிவிம்பராகிய சீவர்கள் அனேகராகையால் ஒவ்வொருவருக்குஒவ்வொருசரீரமாகச் சிருஷ்டித்தளித்தான். இப்படிச் சூக்ஷ்ம சரீரகற்பனை சொல்லப்பட்டது.

இனித் தூலபூத வுற்பத்தி சொல்லுகின்றோம்; அஃதெங்ஙனமெனின்:— தமோம்சமாயிருக்கின்ற ஐந்து பூதங்களையும்ஒவ்வொன்றைஇரண்டிரண்டாகப் பகுத்து முதற்பாதி ஐந்தையும் ஒவ்வொன்றை நான்கு நான்காகப் பகுத்து இரண்டாம்பாதி ஐந்தில்தன்னம்சத்துடனே கூட்டாமல் மற்றை நான்கு பூதங்களுடன் அரைக்கால் அரைக்கால் மாத்திரையாகக் கொடுக்கின்றது 83. பஞ்சீகரணமென்றுசொல்லப்படும். இப்படிப்பஞ்சீகரணம்

82. சூக்ஷ்மசரீரம் - இந்திரியங்கட்குவிஷயமாகாததும் தத்துவஞானத்தால்ஜீரணித்துப்போவதுமாயதேகம்.

83. பஞ்சீகரணம் - ஒவ்வொருபூதத்தில்ஏனைய நான்கு பூதஅம்சங்களைக்கலப்பது. சில ஆசிரியர் ஒவ்வொரு பூதத்தையும் இருபத்தைந்துபகுதிசெய்து அவற்றில்இருபத்தொரு பகுதியை நிறுத்தி எஞ்சியநான்குபகுதிகளையும் தன்தன்னம்சத்துடன்கூட்டாதுஏனையநான்கு பூதங்களுடன் சேர்ப்பது பஞ்சீகரணமென்பர். உதாரணம்:—பிருதிவியை இருபத்தைந்துபகுதிசெய்துஅவற்றில் இருபத்தொரு பகுதிகளை நிறுத்தி எஞ்சிய நான்கு பகுதிகளையும் ஆகாயம், வாயு, தேயு, அப்புவாகிய இந்நான்கு பூதங்கட்கும் ஒவ்வொருபகுதியாகக் கொடுத்தல். ஏனையபூதங்களிடத்து மிவ்வாறே செய்க. செய்யின் பிருதிவியின்கண்தன்னம்சம்இருபத்தொன்றும் பிறவற்றினம்சம் நான்குமாம். ஏனையபூதங்களும் இத்தகையனவாம். இதனானே இருபத்தோலா இடையுடைய பொன்னின்கண்ஒருதோலா இடையுடை

பண்ணின 84. தூலபூதங்களிலே ஆகாசத்திலேபரிச,ரூப,ரச,கந்தம் ஆகிய நான்கு குணங்களும் வியாப்பியமான படியால் 85. அதிருசியமாய்ப் போக நிசகுணமாகிய சத்தந் திருசியமாம். வாயுவிலே ரூப,ரஸ, கந்தம் ஆ

யதாம்பிரங்கவக்கப்படினும் அக்கலவையிற் ரும்பிரத்தோற்றமுண்டாகாமற் பொன்னின்தோற்றமுண்டாவதுபோல,பிருதிவியின் கண்தன்னம்சத்தினதிகத்தன்மையால் பிறவற்றின்தோற்றமுண்டாகாது; தன்தோற்றமே யுண்டாகும். ஏனையபூதங்களுமிவ்வாறுள்ளன.

84. தூலபூதங்கள்:— இந்த ஆகாய முதலான ஐந்துபூதங்கட்கும்முறையேசதாசிவன், மகேசன், உருத்ரன், விஷ்ணு, பிரமன் இவர்களை அதிதெய்வமாகக் கொள்க.

பூதத்தன்மையாவது பாகியேந்திரியத்தாற் கிரகிக்கப்படும் விசேடகுண முடைமை என்பர் தருக்கர்.

85. அதிரிசியமாய்ப்போக - தோற்றுமற்போக.



கிய மூன்று குணங்களும் வியாப்பியமானபடியினால் அதிருசியமாய்ப்போகக்காரணகுணமாகிய சத்தமும், 86. நிசகுணமாகிய பரிசமுந்திருசியமாம். அக்கினியிலே ரஸ, கந்த மாகிய இரண்டு குணங்களும் வியாப்பிய மான படியினால் அதிருசிய மாய்ப்போகக் காரணகுணங்களாகியசத்த,பரிசமும், நிசகுணமாகிய ரூபமுந் திருசியமாம். அப்புவிலே கந்தகுணம் வியாப்பியமான படியினால் அதிருசியமாய்ப் போகக் காரணகுணங்களாகிய சத்த, பரிச, ரூபமும், நிசகுணமாகியரசமுந் திருசியமாம். பிருதிவியிலேகாரணகுணங்களாகியசத்த, பரிச,ரூப,ரசமும், நிசகுணமாகியகந்தமுந் திருசியமாம்.

முன் சூக்ஷ்ம பூதங்களினின்றும் சூக்ஷ்ம சரீரங்கள் தோன்றினாற்போலப் பஞ்சீகரணம் பண்ணினவ் தூலபூதங்களினின்றும் ஆறுதத்து

வமாய், நால்வகைப் பிறப்பாய், மூவகைச்சாதியாயிருக்கின்ற 87. ஸ்தூல சரீரங்கள் தோன்றின; இவற்றுள் ஆறுதத்துவங்களாவன:— 88. சர்மம் 89. உதிரம், 90. மாமிசம், 91, சனுயு, 92. அத்தி, 93. மச்சை இவைகளாம், நால்வகைத் தோற்றங்களாவன;—94. சராயுஜம், 95. அண்

86. நிஜகுணம் - உண்மையான சொந்தக்குணம்.

87. தூலசரீரம் - இந்திரியத்திற்குவிஷயமாவதாய்க்கர்மக்ஷயத்தில் ஜீரணித்துப் போகுந்தேகம்.

88. சர்மம் - தோல்

89. உதிரம் - இரத்தம்

90. மாமிசம் - சதை

91. சனுயு - நரம்பு

92 அஸ்தி - எலும்பு

93. மச்சை - மூளை

94. சராயுஜம் - மாதாவின் வயிற்றிற் கருப்பத்தை மறைக்குந்தோல் விசேஷம் சராயு எனப்படும். இச்சராயுவினின் றுமுண்



டஜம்,96. சுவேதஜம், 97. உத்பிஜ்ஜம் இவைகளாம். மூவகைச் சாதிகளாவன:—இகலோக-பரலோகபுத்திஇருவகையையுங் கொடுக்கின்ற மநுடசரீரம் உத்தமசாதி. பரலோக புத்தியை மறைத்துஇகலோகபுத்தியை மாத்திரங்கொடுக்கின்றபசுபக்ஷிமுதலானவை மத்திமசாதி. இரண்டுலோகபுத்தியையும் மறைத்திருக்கின்ற மரம், கொடி, செடி, முதலியவை அதமசாதி. இப்படிப் பிருதிவி தத்துவமாயிருக்கின்ற பூலோகத்திற் கண்டாற்போலஅப்பு, அக்கினி, வாயு, ஆகாசம் என்னப்ப

டாவன சராயுஜமெனப்படும்

95. அண்டஜம் - முட்டையிற்றோன்றுவன.

96. சுவேதஜம் - உஷ்ணத்தினலுண்டாகும் வெயர்வையிற்றோன்றுவன.

97. உத்பிஜ்ஜம் - பூமியைப் பிளந்து கொண்டு தத்தம் விதை முதலியவற்றிலிருந்துண்டாவன.

ட்ட தத்துவங்களாய் நிரை நிரையே யிருக்கின்ற பிதிர்லோகம், தேவலோகம், யட்ச, கந்தர்வ, சித்தர்லோகங்களிலும் நட்சத்திரமாகத்தோற்றுகின்ற சந்திரன் முதலான பிதிர்க்கள், சூரியன் முதலான தேவதைகள், கந்தருவர், சித்தர் என்னப்பட்டவர்கள் உத்தமசாதி. காமதேனு, அயிராவதம், அன்னம், கருடன் முதலானவை மத்திமசாதி. கற்பகவிருட்சம், பாரிசாதம் முதலானவை அதமசாதி. இந்தத்தூலசரீரமே 98. அன்னமய கோசம். சூட்சுமசரீரம் மூன்று கோசங்களாயிருக்கும். அஃதெங்ஙனமெனின:—பிராணவாயுவும், கர்மேந்தி

---

98. அன்னமயகோசம் - பிதாமாதாக்கள் புசித்த அன்னரசத்தினாலுண்டானசுக்கில சுரோணிதவடிவ வீரியமானது மாதாவின் கருப்பத்தின் கட்டடங்கிக் கரசரணாதிய வயவங்களைப் பொருந்திமாதாப்புசித்தஅன்னசாரத்தினாற் சீவிப்பதாயும், கருப்பத்தி



ரியங்களுங் கூடிப் 99. பிராணமய கோசம, மனதும் ஞானந்திரியங்க

---

னின்றுவெளிப்போந்தும் அன்னகாரியமாகிய ஸ்தன்யத்தையேயருந்திவளர்வதாயும், அன்னத்தின்குறைவால் ஜீரணமடைவதாயுமிருத்தலால் அன்னமயம். மயம் - வடிவம். நான் பிராமணன், பிரமசாரி, ஆண், சிவலை, நெட்டையன், தேவதத்தன், பாண்டிநாடன், பருத்தவன்என்பன முதலியவாய் வர்ணம், ஆச்சிரமம், இலிங்கம், ரூபம், பரிமாணம், நாமம், தேசம், விகாரம் என்னுமிவ்வாயில்களால் அன்னமயமாகிய ஸ்தூலதேகம் அகம்பதார்த்தமாகிய ஆத்மாவை மறைத்தலாற்கோசமாம். கோசம் - உறை.

99. பிராணமயகோசம் - பிராணவாயுவுங்கர்மேந்திரியங்களுஞ்சேர்ந்தது. அதைப் பிராணமயமென்றது பிராணனைப் பிரதானமாகவுடைமையாலென்க. நான்பசியுடையவன், பலவீனன், வசன, தான, விசர்க்க, ஆனந்தங்களாகிய தொழில்களையுடையவன் என்பனமுதலிய அத்தியாசங்களால் இந்தப்

ளுங் கூடி 100. மனோமயகோசம், புத்தியும், ஞானேந்திரியங்களுங் கூடி 101. விஞ்ஞானமயகோசம், காரண

---

பிராண்மயம் அஹம் சத்தார்த்தமாகிய ஆத்மாவை மறைத்தலால் கோசம்.

100. மனோமயகோசம் - மனமும், ஞானேந்திரியங்களுஞ் சேர்ந்தது. அதைமனோமயமென்றது மனத்தின் பிரதானம் பற்றி யென்க. நான் சங்கற்பித்தேன், சம்சயித்தேன், சிந்தித்தேன், கேட்டேன், தொட்டேன், ருசித்தேன், மோந்தேன், என்பனமுதலிய அத்தியாசங்களால் இந்த மனோமயம் அஹம்பிரத்தியயத்திற்கு விஷயமான ஆத்மாவை மறைத்தலால் இது கோசமாம்.

101. விஞ்ஞானமயகோசம் - புத்தியும்ஞானேந்திரியங்களுஞ்சேர்ந்தது. இதை விஞ்ஞானமய மென்றது புத்திரூப விஞ்ஞானத்தைப் பிரதானமாக வுடைமையாலென்க. நான் யூகவான், நிச்சயவான், சூக்ஷமக்கிராகி, அபிமானி என்பன முதலிய வத்தியாசங்களால் இந்த விஞ்ஞானமயம்



சரீரமே 102 ஆனந்தமயகோசம்;இப்படிப்பஞ்சகோசஞ்சொல்லப்பட்டன.

ஆறு தத்துவங்களாயிருக்கின்ற ஸ்தூல சரீரத்திலே இருபது தத்துவங்களா யிருக்கின்ற சூட்சும சரீரமிருக்கின்றது. அஃதெப்படியெனின்:— கர்மேந்திரி யங்களுள் வாக்கும், ஞானேந்திரியங்களுள் சிங்குவையும் வாயிலிருக்கும். உதானவாயுவும், மனதும் கண்டத்திலேயிருக்கும் பிராணவாயுவும், புத்தியும் இருதயத்திலே யிருக்

---

அஹம்பதப்பொருளாகிய ஆத்மாவை மறைத்தலால் இது கோசமாம்.

102. ஆனந்தமயகோசம் - காரணசரீரம்; இதை ஆனந்தமயமென்றது (பிரிய, மோதப், பிரமோதமாகிய) ஆனந்த ரூப விருத்திகளைப்பிரதானமாக வுடைமையாலென்க. நான் பிரியன், சுகி, நானறியேன் என்பன முதலியவத்தியாசங்களால் இந்த வானந்தமயம் அஹம்பதப் பொருளாகிய ஆத்மாவை மறைத்தலால் இது கோசமாம்.

கும். சமானவாயுவும், சித்தமும் நாபி யிலிருக்கும். அபானவாயுவும் பாயுரு வும் குதத்திலிருக்கும். வியானவாயு வும், ஞானேந்திரியங்களுள் துவக்கும், அகங்காரமும் சர்வாங்கமும் வியாபித் திருக்கும். உச்சியிலே உள்ளமும், கரு விழிநுனியிலே சக்ஷுரிந்திரியமும், காதிற்குள்ளே சுரோத்ரேந்திரியமும், மூக்குநுனியிலே கிராணேந்திரியமும் கழுத்திற்குமேலே தனித்தனியேயிரு க்கும். கழுத்திற்குக் கீழே கை, கால், குய்யங்களில் பாணி, பாதம், உபஸ் தம்மூன்றுந் தனித்தனியே யிருக்கும். இப்படித் தூலசரீரதத்துவங்கள் ஆறு, அதிற்குடி புகுந்த சூட்சுமசரீரதத்துவ ங்கள் இருபது; ஆகதத்துவங்கள் இரு பத்தாறும்பஞ்சபூதங்களின் காரியமா னபுடியினலே ஒருமைப்பாடாகக்காரி யசரீரமென்று சொல்லப்படும்.

அவித்தையிற் பிரதிவிம்பித்த



சிதாபாசன் 103. சாக்கிரத்திலே இந்த இருபத்தாறு தத்துவங்களுட னே கலந்து நின்றபோது 104. விசுவ னென்றும், 105. வியவகாரிக சிவனெ ன்றுஞ் சொல்லப்படுவன் 106 சொப் பனத்திலே தூலசரீரத்தைவிட்டு அந் தக்கரணத்துடனே கூடிநின்றபோது

---

103. சாக்கிரம் - சொப்பனுவஸ்தை சுழுத்தியவத்தைகளுக்கு வேருய் இந்தி ரிய ஜன்னிய ஞானத்தின் ஆதாரகாலம்.

104 விஸ்வன் - உலகத்தோடு சம்பந் தப்பட்டவன்.

105 வியாவகாரிகன் - வியாவகாரிக சத்தையுடைய பெண்டு முதலிய வற்ருேடு சம்பந்தப் பட்டவன். ஆன்மஞானத்திற்கு முன்பாதமாகாப்பொருள் வியாவகாரிக சத்தை.

106. சொப்பனம் - இந்திரியத்தினுற் ஜன்னிய மாகாத விஷயகோசர அந்தக் காணத்தினது அபரோக்ஷ விருத்தியி னவஸ்தை.

107. தைஜசனென்றும், 108. பிராதிபாசிகசீவனென்றும், 109, சொப்பன கற்பிதனென்றுஞ் சொல்லப்படுவன். 110. சுழுத்தியிலே காரியசரீர தத்துவங்கள் இருபத்தாறையுங் கை

107 தைஜசன் - தேஜஸ் சப்தத்தின் பொருளாயுள்ள அந்தக்கரணமுதலிய வற்றோடு சம்பந்தப்பட்ட ஜீவன்.

108 பிராதிபாசிகஜீவன் - சொப்பனவஸ்தையில் பிராதிபாசிக சத்தையாயுள்ள பெண்டுமுதலியவற்றோடு சம்பந்தப்பட்டவன். பிராதிபாசிகசத்தை - ஆன்மஞானத்தின் முன்னமே பாதமாகும் பொருள்.

109 சொற்பன கற்பிதன் - எவனால் சொற்பனம் கற்பிக்கப்பட்டதோ அவன் சொற்பன கற்பிதன் எனவடமொழி இலக்கண முணர்ந்தார் கூறுப.

110. சுழுத்தியவஸ்தை - சுககோசரமும் அவித்தியாகோசரமுமான (விஷயம் பண்ணுவதுமான) அஞ்ஞானத்தின் சாக்ஷாத் (நேர்) பரிணம (திரிபு) வடிவ விருத்தியின வஸ்தை (காலம்.)



விட்டுக் காரணசரீரத்தை மாத்திரம் பொருந்தி யிருக்கும்போது பிராக்ஞனென்றும், 111. பாரமார்த்திக சீவனென்றுஞ் சொல்லப்படுவன். பிரமசைதன்னியமும் சாக்கிரத்திற்குச் சாக்ஷியாயிருக்கும்போது 112. சீவாத்மாவென்றும், சொப்பனத்திற்குச் சாக்ஷியாயிருக்கும்போது 113. அந்தராத்மா வெனறும், சுழுத்திக்குச் சாக்ஷி

111. பாரமார்த்திக ஜீவன் - பாரமார்த்திக சத்தையாயுள்ள பரசிவத்தோடு சம்பந்தப்பட்ட ஜீவன்.

பாரமார்த்திகசத்தை - மூன்று காலத்தும் பாதிக்கப்படாப்பொருள்.

112. ஜீவாத்மா -சர்வவிகாரங்களையும் சாக்ஷிமாத்திரமாக அறிந்து கொண்டு, தான் அவிகாரியாய் எக்காலத்தும் அழிவின்றிய ஜீவிதப் பொருளாயுள்ளது.

113. அந்தராத்மா - சாக்கிர சுழுத்திகட்கு இடையாயுள்ள சொப்பனவஸ்தைக்குச் சாக்ஷிமாத்திரமாக இருக்கும் பொருள் அந்தரம் - இடை.

யாயிருக்கும்போது 114. பரமாத்மா வென்றும், அவஸ்தாத்திரயசாக்ஷியாயிருக்கும்போது 115. ஞானாத்மாவென்றும், 116. கூடஸ்தனென்றுஞ் சொல்லப்படும். இப்படிச் சீவனுக்குமூன்று சரீரங்களும், மூன்றவஸ்தைகளுஞ்சொல்லப்பட்டன.

இனி ஈசுரனுக்கு மூன்று சரீரங்களும், மூன்றவஸ்தைகளுஞ் சொல்லும்படி:—கற்பிதப்பிரபஞ்ச வடிவமாகத்

---

114. பரமாத்மா - சுழுத்தியின்கண் ஜீவனைப்போல் அவித்தையில் மூழ்காமல் எல்லாவற்றிற்கும் சாக்ஷிமாத்திரமாய் மேலாயிருக்கும் பொருள்.

115. ஞானாத்மா - அறிபடும் பொருளன்றி எதனையுமபேக்ஷியாயல் எப்போதும் எல்லாவற்றையும் அறிந்துகொண்டு தானே தானாய் விளங்கும் பொருள்.

116. கூடஸ்தர் - கூடம் போன்று நிர்விகாரமாய் விளங்கும் பொருள். கூடம்—கொல்லனது பணை.



தோன்றுகின்ற தூலபஞ்சபூதங்களும், அந்தப் பூதங்களிலே தோன்றின மூன்று சாதியாயிருக்கின்ற 117. தூலசரீரசமஷ்டியுங் கூடினது ஈசுர தூல சரீரமென்றும், 118. விராட்டென்றுஞ் சொல்லப்படும். இதனுடனே கூடிச் சாக்கிராவஸ்தையைப்பொருந்துகின்ற ஈசுரன் 119. வைசுவானரனென்றும், இந்த இருவகைக்கும் அதிஷ்டான சைதன்னியம் பிரமாவென்றுஞ் சொல்லப்படும். சூட்சும பூதங்கள்ஐந்தும், அந்தப்பூதங்களிலே தோன்றின சூட்சுமசரீர சமஷ்டியுங்

---

117. சமட்டி தூலசரீரம் - சர்வ வியஷ்டி தூலசரீரங்களின்கூட்டம்.

வியட்டி தூலசரீரம்-ஒன்றுக்கொன்று வேறுபாடுடைய தனித்தனித் தூலசரீரம்.

118. விராட்டு - பலவகைப்பட்ட பிரகாசமுடையது.

119. வைஸ் வானரன் - சர்வநரர்களின் அபிமானியாயிருப்பவன்.

கூடினது ஈசுர சூட்சுமசரீரமென்றும், 120. இரண்ய கர்ப்பமென்றுஞ் சொல்லப்படும். இதனுடனே கூடிச் சொப்பனுவஸ்தையைப் பொருந்துகின்ற ஈசுரன் 121. சூத்திராத்மா வென்றும், இந்த இருவகைக்கும் அதிஷ்டான சைதன்னியம் விஷ்ணு வென்றுஞ் சொல்லப்படும். இநதத் தூலம், சூட்சுமம் இரண்டின் வாச

120. இரணிய கர்ப்பம - பொன் போன்ற பிரகாசத்தை மத்தியிலுடையது. சமட்டி சூக்ஷ்மசரீரம் ஞானசத்தியுடைய அந்தக்கரண ஞானேந்திரியங்களோடு பொருந்தியிருத்தலின் இப்பெயர் பெற்றதென அறிக.

121. சூத்திராத்மா - சூத்திரம் போன்று வியாபகமாயிருப்பது. சூத்திரம் - நூல். ஆத்மா - வியாபகம். நூலானது ஆடையின்கண் வியாபகமாயிருத்தல் போலச்சமட்டி சூக்ஷ்ம சரீரம், பிரமாண்ட முழுமையும் வியாபித்து நிற்றலின் இப்பெயர் பெற்றதென அறிக.





னையுடனே கூடியிருக்கின்ற மாயை ஈசுர காரணசரீர மென்றும் 122. அவ்வியாகிருத மென்றுஞ் சொல்லப்படும். இதனுடனே கூடிச் சுழுத்தியவஸ்தையைப் பொருந்துகின்ற ஈசுரன் 123. அந்தரியாமி யென்றும், இந்த இருவகைக்கும் 124. அதிஷ்டானசைதன்னியம் உருத்திரனென்றுஞ்சொல்லப்படும். சீவன், தன்மூன்றவஸ்தைகளிலும் தன்மூன்று சரீரங்களாயிருக்கின்ற இருபத்தேழு தத்து

122. அவ்வியாகிருதம் - நாமரூபமாக வெளிப்படாதது. வியாகிருதம் - வெளிப்படுவது.

123. அந்தரியாமி - சகலஜீவர்களின் இருதயத்திலுள்ளிடா யிருந்துகொண்டு கருமத்தை யனுசரித்து அவர்களை யியக்குபவன்.

124. அதிஷ்டானம் - எதன் அஞ்ஞானத்தால் ஆரோபந்தோன்றுமோ எதன் ஞானத்தால் அதுநிவிர்த்தியாமோ அது வாகும்.

வங்களுடனும் நானென்று கலந்து நிற்கின்றதுபோல ஈசுரனுந் தன் மூன்றவஸ்தைகளிலுந் தன்மூன்று சரீரங்களாயிருக்கின்ற முப்பத்திரண்டு தத்துவங்களுடனுங் கலந்து நிற்பன். ஆகையினாலே சீவ சிதாபாசன் தன் சரீரமாத்திரமே கலந்து நிற்பன். ஈசுரன், தன்சரீரமாகிய சகல சரீரங்களோடும் சகல பிரபஞ்சங்களோடும் கலந்து நிற்பான். இந்த இருவகைக்கும் சாக்ஷியாயிருக்கின்ற பிரம சைதன்னியமும், சகல சரீரங்களிலும் சகல பிரபஞ்சங்களிலும் நிறைந்து அப்பாலும் பத்துத்திக்கையும் 125. அதிக்கிரமித்து எல்லையற்றிருக்கும் சிவனுக்குத் 126. தூலசரீர வியவகாரத்திற்கு அன்னமயமான சட்

---

125. அதிக்கிரமித்து - மீறி.

126. தூலசரீரவிவகாரத்திற்கு - ஜாக்கிராவஸ்தையிற் றூலசரீரத்தோடு கூடிச் செய்யும் விவகாரத்திற்கு.



கோசதத்துவங்கள் - 6, சூட்சும சரீர தத்துவங்கள் - 20, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-5, ஆகத் தத்துவங்கள் - 31. 127 சூக்ஷ்ம சரீரவியவகாரத்திற்குச் சூக்ஷ்ம சரீர தத்துவங்கள் - 20, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-5, ஆகத் தத்துவங்கள் - 25. 128. காரணசரீர வியவகாரத்திற்குச் சீவன், ஈசுரன்,

---

127. சூக்ஷ்மசரீரவிவகாரத்திற்கு - சொப்பனவஸ்தையிற் சூக்ஷ்மசரீரத்தோடு கூடிச் செய்யும் விவகாரத்திற்கு.

128 காரண சரீரவிவகாரத்திற்கு - சுழுத்தியவஸ்தையிற் காரணசரீரத்தோடு கூடிச்செய்யும் விவகாரத்திற்கு. இவ்விவகாரமென்பது அவித்தையின் சத்துவகுண விருத்தியால் அஞ்ஞானத்தையும், அஞ்ஞானத்தால் மறைபட்டுள்ள பிரம்மானந்தத்தையும் அனுபவித்தலாம். இது சுழுத்தியின்கண் நிகழும் அனுபவ விசேஷம். இவ்வனுபவத்திற்குச் சான்று சுழுத்தியை

அவித்தை, 129. வித்தை, பிரமம் -5. 130. சீவவியவகாரத்திற்குச் சீவன், ஈசுரன், பிரமம்-3. 131. சாக்ஷிவியவகாரத்திற்குச் சாக்ஷி-1. ஈசுரனுக்குத் தூலசரீரவியவகாரத்திற்குச் சமஷ்டி அன்னமயகோச தத்துவங்கள் - 6, சமஷ்டிசூக்ஷுமசரீரதத்துவங்கள் 20, சமஷ்டி சீவன், அவித்தை - 2, ஈசுரன்

விட்டெழுந்தவுடன் ஒன்று மறியாமற் சுகமாயுறங்கினேன் என்னும் ஸ்மிருதியேயாம்.

129. வித்தை - மாயை.

130 ஜீவவிவகாரத்திற்கு - ஜீவனது துரியாவஸ்தையிலுள்ள விவகாரத்திற்கு. இங்கு விவகாரமென்பது ஆத்மாவையறிந்து ஆனந்தத்தை யனுபவித்தல்.

131. சாக்ஷிவிவகாரத்திற்கு - ஜீவன் துரியாதீத அவஸ்தையிலுள்ள சாக்ஷி மாத்திரமாயுள்ள விவகாரத்திற்கு. இங்கு விவகாரமென்பது தானே தானுயிருத்தல், அல்லது பிரஹ்மம் எப்படியோ அப்படியிருத்தல்.



வித்தை, பிரமம்-3, தூல பூதங்கள் -5 ஆகத் தத்துவங்கள் - 36. சூக்ஷுமசரீர வியவகாரத்திற்குச் சமஷ்டி சூக்ஷுமசரீரதத்துவங்கள் 20, சமஷ்டி சீவன், அவித்தை - 2, சூக்ஷுமபூதங்கள் - 5, வித்தை, ஈசுரன், பிரமம்-3 ஆகத்தத்துவங்கள் 30. காரணசரீர வியவகாரத்திற்கு வித்தை, ஈசுரன், பிரமம்-3. ஈசுரவியவகாரத்திற்கு ஈசுரன், பிரமம்-2. பிரமவியவகாரத்திற்குப் பிரமம்-1. இந்திரிய வியவகாரத்திற்கு இந்திரியம்-1, சட்கோசதத்துவங்கள் 6, அந்தக்கரணம் -5, வாயு - 5, சீவன் ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-5 ஆகத் தத்துவங்கள் 22 மனோராச்சிய வியவகாரத்திற்கு அந்தக்கரணம்-5, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-5, ஆகத் தத்துவங்கள் - 10. இப்படித்தத்துவங்களினுடையதோற்றமும், நிலையுஞ் சொல்லப்பட்டன.

இனித் தத்துவங்கள் ஒடுங்குகின்ற வழிசொல்லுகின்றோம். சகல சீவரிடத்திலுமிருக்கின்ற தூல சரீரங்களனைத்தும், தமக்கு ஆதாரமான தூல பூதங்களிலே மடிந்து பூதமாத்திரமாக ஒடுங்கும். இந்தத் தூலபூதங்களும், பஞ்சீகரணம் விட்டுத் தன்மாத்திரைகளான தமோகுண பூதங்களாக மிஞ்சும். அப்போது கேவலம் இரண்யகர்ப்பாவஸ்தை யென்று சொல்லப்படும். சூக்ஷ்ம சரீரதத்துவங்க ளிருபதுங் கட்டுவிட்டுப் பூதங்களினுடைய சத்துவகுணமும், இரஜோகுணமுமாக ஒடுங்கும்; அஃதெங்ஙனமெனின்:—சகல பிராணிகளிடத்திலு மிருக்கின்ற அகங்காரமும், கிராணேந்திரியமும், உதானவாயுவும், உபஸ்தேந்திரியமும் பிருதிவியில் ஒடுங்கும். சித்தமும், சிங்குவையும், சமானனும், பாயுருவும் அப்புவில்



ஒடுங்கும். புத்தியும், சக்ஷுவும், அபானனும், பாதமும் அக்கினியில் ஒடுங்கும். மனதும், தொக்கும், பிராணனும், பாணியும் வாயுவில் ஒடுங்கும். உள்ளமும், சுரோத்திரமும், வியானனும், வாக்கும் ஆகாசத்தில் ஒடுங்கும். அப்போது பழையபடியே மூக்குண பூதங்களாகும். இந்தச்சூக்ஷ்ம பூதங்களும், பிருதிவி அப்புவில் கரைந்து ஒடுங்கும். அப்புவும், அக்கினியிற் சுவறி ஒடுங்கும். அக்கினியும், விளக்குப்போல வாயுவிலணைந்து ஒடுங்கும். வாயுவும், ஆகாசத்திலே ஓய்ந்து ஒடுங்கும். ஆகாசமும், விக்ஷேப சத்தியில் ஒடுங்கும். ஆவரண சத்தியும் விக்ஷேப சத்தியும் மூலப்பிரகிருதியின் தமோகுணமாத்திரமாய் ஆலமரம் ஆலம் விரையில் ஒடுங்கினாற் போல இன்னும் ஒரு சிருஷ்டிக்கு வித்தாகமாயையிலும், அவித்தையி

ளும் 132. ஒடுங்கும். இந்தமாயையும், அவித்தையும் அதி நுண்மையான மூலப்பிரகிருதியென்று சொல்லப் பட்ட விந்து தத்துவத்தில் ஒடுங்கும். அந்த விந்துவும், பாம்பென்கின்ற பெயர்போய்ப்பழுதையாகக்கண்டாற் போலத் தனக்கு அதிஷ்டானசைதன் னியமான பிரம சைதன்னிய மாத்

---

132. ஒடுங்கும் - ஆவரண சத்தி அவித்தையிலொடுங்கும், விக்ஷேபசத்தி மாயையிலொடுங்கும். இது எதிர்நிரல் நிறைப்பொருள் கோள். நிரல் நிறைப் பொருள் கோளாக ஆவரணசத்தி மாயை யிலும், விக்ஷேபசத்தி அவித்தையிலும் ஒடுங்காமை என்னை யெனின்! - அவ்வா வரண சத்திக்கே யோகத்தை விளைவிக்குந் தன்மையிருப்பதால் அது அத்தன்மை வாய்ந்த அவித்தையிலும், விக்ஷேபசத்திக்கு மோகத்தை விளைவிக்குந்தன்மை யின்மை யால் அது அத்தன்மைவாய்ந்த மாயையி லும், இறைவன் சங்கற்பத்தால் ஒடுங்கு மென்க.



திரமாக ஒடுங்கும். இப்படிப்பொய் யெல்லாம் மெய்ப்பொருள் ஒன்றாகக் கண்டு, அதுவே 133. சுபாவ சித்த மாய்நிசமாயிருக்கின்றதன்வடிவெனக் கண்டுதெளிந்து கவலைகெட் டிருக்கின் றவனே சீவன் முத்தன். இப்படித் தத்துவங்களின் ஒடுக்கஞ் சொல்லப் பட்டது.

---

“ஆவரண சத்திப் பிரதானமான அஞ்ஞானம் அவித்தை எனப்படும்.

விக்ஷேபாதி சத்திப்பிரதானமான அஞ்ஞானம் மாயையெனப்படும்” என்னுந் தத்துவானுசந்தானக்கூற்று இங்கு அறி யத்தக்கது.

133. சுபாவசித்தம் - இயற்கையாகப் பெறப்பட்ட தன்மை.

சுபாவம் என்ற பதத்தால் அம்சாம் சிபாவம், விகார விகாரிபாவம், உபாசக உபாசியபாவ முதலியன போலக் கூடஸ்த னுக்கும் பிரஹ்மத்திற்கும் அற்பமும் பேத மின்றென்பதையும், பேதமின்மையின்

இப்படித் தோற்றி ஒடுங்கின தத்துவங்கள்-36, அவையாவன:— பூதங்கள் 5, ஸ்தூல சரீரதத்துவங்கள் -6, சூக்ஷ்மசரீர தத்துவங்கள்-20, காரணசரீரமானமாயை, அவித்தை-2, இவற்றில் பிரதிவிம்பித்த சீவன், ஈசுரன்-2, இவைகட்கெல்லாம் அதிஷ்டான சைதன்னியமா யிருக்கின்ற பிரமம்-1, இவையாம். இவைகளில், பூதங்கள்-5, மாயை-1, மாயாப்பிரதிவிம்பரான ஈசுரன்-1, பிரமம்-1, ஆக இந்த எட்டும் சகல பிராணிகளுக்குஞ்

---

சாரியத்தன்மை, பிரகாசியத்தன்மை, ஆதேயத்தன்மை ஆகிய பாதந்திரமுடைய தன்று என்பதையும் குறிப்பித்தனர்.

அம்சம் - கூறு. அம்சி - கூற்றை யுடையது. விகாரம் - திரிபு. விகாரி - திரிபுடையது. உபாசகன்-உபாசனை செய்பவன். உபாசியம் - உபாசிக்கப்படும் பொருள். பாதந்திரம் - ஒன்றன் அதீனமாதல்.



134. சமுதாயமாக வநுபவிக்கப்படும். மற்றை இருபத்தெட்டும், அவன் அவனுக்குப் 135. பிருதக்காக வனுபவிக்கப்படும். அஃதெங்ஙனமெனில், பிருதிவிதத்துவம் ஒன்று இறக்கில் எல்லாருக்கும் ஆதாரமில்லை. மழை மரிக்கில் எல்லாருக்குஞ் சலமில்லை. தேயுவில்லாதிருந்தால் பாகமில்லை, வாடைதென்றல் இல்லாவிட்டால் வாயு வியக்கமில்லை. ஆகாசம் இறக்கில் ஒருவருக்கும் 136. அவகாசமில்லை. மாயையும், மாயாப்பிரதிவிம்பரும் இறக்கில் சகலசமயங்களுக்குந்தெய்வமில்லை. பிரமமில்லையேல் ஒருவருக்கும் அறிவில்லை; ஆகையால் இந்த எட்டும் எல்லாருக்குஞ் சமுதாயமாம். பிருதக்கு எங்ஙனமெனின், ஒருவ

---

134. சமுதாயமாக - பொதுவாக.
135. பிருதக்காக - வேறுவேறாக.
136. அவகாசம் - இடம்.

னுக்கு ஸ்தூல சரீரம் இறக்கில் எல்லாருக்கும்ஸ்தூலசரீரம்இறவாதபடியினுலும், சூக்ஷ்ம சரீரத்தில் ஒருவனுக்கு அங்கவைகல்யம் வந்தால் எல்லாருக்கும் வாராதபடியினுலும், முத்தராயிருந்த சுகர், வாமதேவர் முதலானபேருக்கு அவித்தையும், சீவனும் இறந்துபோயிருக்க மற்றைப் பேருக்கெல்லாம் அவித்தையும், சீவனும் இறவாதபடியினுலும் இந்த இருபத்தெட்டுத் தத்துவங்களும் அவனவனுக்குப் பிருதக்கென்பதிலே சந்தேகமேயில்லை.

இந்தத் தத்துவங்கள் முப்பத்தாறில் எப்போதும் தானுகவே காணப்படுகிற தத்துவம் ஒன்று, எப்போதும் தனக்கன்னியமாகக் காணப்படுகிற தத்துவங்கள் ஏழு; தானுகவும் தனக்கனனியமாகவும் அநுபவிக்கப்படுகிற தத்துவங்கள் இருபத்



தெட்டு; அஃதெங்ஙனமெனில், அவஸ்தாத்திரய சாக்ஷியாயிருக்கின்ற பிரமசைதன்னியம் எல்லா வவஸ்தைகளிலுந் தானுக விளங்குகையினுலும், மற்றத்தத்துவங்கள் போலத் தனக்கன்னியமாக விளங்காதபடியினுலும் அந்தப் பிரம சைதன்னியம் ஒன்றுமே தானுகக் காணப்படுகிறது. பஞ்சபூதங்கள், மாயை, மாயாப்பிரதிவிம்பர் ஆக ஏழும் தந்தந் தொழிலான வெட்டு, கொத்து, உழவு; 137. பஞ்சகிருத்தியம், 138. தசாவ

---

137. பஞ்சகிருத்தியம் - சிருட்டி, திதி, (காத்தல்) சம்ஹாரம், திரோபவம், (மறைத்தல்) அனுக்கிரகம், (கிருபைசெய்தல்). இவை இறைவனுக்குத் தடஸ்தவிலக்கணம்.

தடம் - இடம். ஸ்தம் - இருப்பது. யாதேனும் ஓரிடத்து ஓர்காலத்திருந்துகொண்டு பிறவற்றினின்றும் வேறுபிரித்து உணர்த்துவது தடஸ்தவிலக்கணம்.

தார முதலானவை ஒருகாலும் தன்
னுடைய தொழிலாகக் காணப்படாத
படியினாலே தனக்கன்னியங்களே யல்
லாமல் தானாகமாட்டா. மற்றை இரு
பத்தெட்டுத் தத்துவங்களுள்ளே நான
பிராமணன், நான் க்ஷத்திரியன், நான்
வைசியன், நான் சூத்திரன், நான் பிர
மசாரி, நான் கிருகஸ்தன், நான் வா
னப்பிரஸ்தன், நான் சந்நியாசி, நான்
ஆண், பெண், நான் கறுவல், சிவலை,
கட்டையன், நெட்டையன், நான்
பருத்தேன், இளைத்தேன் என்று
தானாக வழங்குகிற ஸ்தூல சரீரம்
ஆறு தத்துவங்களும், மற்றொரு வே
ளையிலே தனக்குப் புறம்புபட்டு என்
மாடு, என் கன்று என்றாற்போல

138. தசாவதாரம் - பத்து அவதாரம். அவதாரம் - மேலிருந்து கீழிறங்குதல். அவையாவன:— மச்சம், கூர்மம், வராகம், நாரசிங்கம், வாமனம், பரசுராமன், இராமன், பலராமன், கண்ணன், கற்கி.



என்சரீரம் பருத்தது, இளைத்தது,
நரைத்தது, என் சரீரம் பிறந்து இத்
தனை நாளாயிற்றென்று தான்வேறு,
தூலசரீரம் வேறாக வழங்குகிறபடியி
னாலும், நான் கண்டேன், கேட்டேன்,
தொட்டேன், போகித்தேன், கொடுத்
தேன், வாங்கினேன், நடந்தேன், புசி
த்தேன், சிந்தித்தேன், நிச்சயித்தேன்,
இந்தப் பஞ்சத்திற்குச் சீவித்தேன்
என்று தானாக வழங்குகிற சூக்ஷம
சரீரதத்துவங்கள்இருபதும், மற்றொரு
வேளையிலே தனக்குப் புறம்புபட்டு
என் வீடு, என் உடைமை என்றாற்
போல என் கண், என் காது, என்
மூக்கு, என் நாக்கு, என்கை, என்
கால், என் மனம், என் புத்தி, என்
அகங்காரம், என் சித்தம், என் பிரா
ணன் என்று, தான் வேறு அவைகள்
வேறாக வழங்குகிறபடியினாலும், நான
அறிவேன், அறியேன் என்று தானாக

வழங்குகிற 139. அஞ்ஞானமும், சிதாபாசனும் மற்றொரு வேளையிலே தனக்குப்புறம்புபட்டு என் அஞ்ஞானம், என் சீவன் என்று வழங்கக் கண்ட படியினாலும் இந்த இருபத்தெட்டுத் தத்துவங்களும் தானாகவும், தனக்கு அன்னியமாகவும் வழங்குகின்றது சித்தம்.

இப்படிச் சொன்ன குருவைப் பார்த்துச் சீடன் கேட்கும்படி:—இந்த இருபத்தெட்டுத் தத்துவங்களுந் தானானால், சாக்ஷியைப்போல ஒரு தன்மையாகத் தோற்றவேண்டுமே

---

139. அஞ்ஞானம் - சொரூபத்தை மறைப்பது. இதனிலக்கணம்:— உள்ளதற்கும் இல்லதற்கும் வேறாய் உற்பத்தியிலதாய் உணர்வால் அழிந்து விடுவதெதுவோ அது அஞ்ஞானம். அல்லது; ஆவரண விக்ஷேபசத்திகளையுடையதாயுள்ள அனாதி பாவபதார்த்தம் (உள்பொருள்) அஞ்ஞானம்.



யல்லாமல், பஞ்ச பூதங்களைப்போலத் தனக் கன்னியமாகக் காணக்கணக்கில்லை. இந்த இருபத்தெட்டும்தனக் கன்னியமேயானால் எப்போதும் புறம்புபட்டே இருக்கவேண்டுமல்லாமல் தானாக வழங்கக் கணக்கில்லை. தானுமாய், தனக்கன்னியமுமாயிருக்குமென்கிறது இருட்டாதித்தன் என்றாற்போலும் வெள்ளாள தீக்ஷிதன் என்றாற்போலும் விருத்தமாமென்னுஞ் சங்கைக்கு, பரமார்த்தமாகத் தான் என்கின்றது ஒரு வகையும், 140. அத்தியாசத்தினாலேதான் என்கின்றது ஒருவகையும் ஆக இருவகையுமுண்டு. சாக்ஷிசைதன்னியத்தைத் தான் என்கின்றது பரமார்த்தமல்லாமல் உபசாரமல்ல. தனக்கன்னியமாயிருக்கின்ற இந்த இருபத்தெட்டையும் தான் என்கின்றது கட்டையைக்

---

140. அத்தியாசம் - மயக்கவுணர்ச்சி.

கள்ளனென்றாற்போலும், பழுதையைப் பாம்பென்றாற்போலும் புத்திரதாராதிகளைத் தானென்றாற்போலும் மயக்கமேயல்லாமல் உண்மையல்ல. ஆகையினால் அஞ்ஞானகாலந்தொடங்கித் தானல்லவென்று காணப்பட்ட தத்துவங்கள்-7, இப்போது இப்படிப்பட்ட விவேகம் பண்ணின பிற்பாடு தானல்லவென்று காணப்பட்ட தத்துவங்கள்-28, ஆக இந்த 35- தத்துவங்களையும் அததற்குச் சொன்ன குணம், குறிகளுடனே கூடக்காண்கின்ற அறிவானது கடத்தைப் பார்க்கின்றவன் கடத்திற்குப் புறம்பாகவேயிருந்து கடத்தைப் பார்க்கின்றது போல அவைகளை அறிகின்றதென்றும், முப்பத்தாறுந் தத்துவமாகிய அதுவே தானென்றும், அதுவே பரமசிவமென்றும் 141. கலக்கமறத்

141. கலக்கமற - சந்தேக விபரீதமற.



தெளிந்தவனே சிவதரிசனமுடைய, சீவன்முத்தனென்று சொல்லப்படுவனென்றுத்தரம்.

இப்படிப் பிரமமே தாமென்றும், மற்றை முப்பத்தைந்து தத்துவங்களும் தமக்கன்னியமென்றும் பிரித்தறியாத அவிவேகிகள், அகங்காரக்கிரந்தியினாலே புத்திரதாராதிகள் தபிக்கின்றதைத் தாம் தபிக்கிறோம் என்கிற மூடகரம் போல இந்த இருபத்தெட்டினுடைய தொழில்களையும் தம் தொழிலென்று மயங்குகின்றபடியினாலே, இந்த இருபத்தெட்டினாலும் 142. ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணியபாவங்களினாற் கட்டுப்பட்டு அந்தக் கர்மத்தின்படியே சனனமரணாதி சம்சாரத்திலே அடிபடுகிறோமென்று மயங்குவர். பிரம சைதன்னியமே

142. ஆர்ச்சிக்கப்பட்ட - சம்பாதிக்கப்பட்ட.

தாமென்றும், மற்றை முப்பத்தைந்
தும் தானல்லவென்றுந் தெளிந்த
விவேகியானவன் அகங்காரக்கிரந்தி
யற்றபடியினால் இந்த இருபத்தெட்டி
னுடைய தொழில்களையும்நான்செய்ய
வில்லையென்றும், இந்த இருபத்தெட்
டும் புசிக்கின்றதை நான் புசிக்கவில்லை
யென்றும் திடப்படத்தேறி மயக்க
மற் றிருக்கின்றபடியினால் இந்த இரு
பத்தெட்டினாலும் ஆர்ச்சிக்கப்பட்ட
புண்ணிய பாவங்களினின்றும் விடு
பட்டுக் கர்மமில்லாதபடியினால், சனன
மரணாதி சம்சாரமில்லாமல் முத்த
னாய்ப் பிரம மாத்திரமாகவே யிருப்
பன். இவனைச் 143. சீவன் முத்த

---

143, ஜீவன் முத்தன் - ஜீவன் முத்தி
யையுடையவன். ஜீவன் முத்தி - சிரவண
முதலியவற்றாற் றோன்றின பிரஹ்மசா
க்ஷாத் காரமுடைய வித்வத்சன்னியாசிக்கு
ஜீவித அவஸ்தையிற் கருத்திருத்தன்மை
முதலியபந்தத் தோற்றத்தின் நீக்கம்.



னென்றும், 144. திடப்பிரக்ஞனென்
றும்,145. அதிவர்ணாச்சிரமியென்றும்
146. குணாதிதனென்றும், 147. பகவற்

---

வித்வத்சன்னியாசி - ஞானமடைந்
பிறகு துறந்தோன்.

144. திடப்பிராஞ்ஞன் - ஐயந்திரி
இன்றித்திடமான ஞானத்தை யுடையவன்

145. அதிவர்ணாச்சிரமி - வர்ணாச்சி
மங்களைக் கடந்தவன்.

146. குணாதீதன் - சத்துவ முதலி
முக்குணங்களையுங் கடந்தவன்.

147. பகவத்பக்தன்-பகவானிடத்துப்
பத்தியை யுடையவன்-

சம்பூர்ண ஐசுவரியம், சம்பூர்ணதர்மம்,
சம்பூர்ணகீர்த்தி, சம்பூர்ணஸ்ரீ, சம்பூர்ண
வைராக்கியம், சம்பூர்ண ஞானம், ஆகிய
இவ்வாறும் பகமெனப்படும். இப்
பகம் இடையூறின்றி எப்பொழுதும் எவ
ரிடத்திருக்கின்றதோ அவருக்குப் பகவா
னெனப்பெயராம். அல்லது சர்வபூதங்க
ளின் உற்பத்தி, அவ்வுற்பத்தியின் கார
ணம், அவ்வெல்லாப் பூதங்களின் அழிவு,

பத்தனென்றும், 148.பிராமணனென்

அழிவின் காரணம், சர்வபூதங்களின் சம்பத்து வடிவ ஆகதி (வருதல்), ஆபத்துவடிவகதி (செல்லுதல்), வித்தை, அவித்தை ஆகிய இவைகளை உணர்பவருக்குப் பகவானெனப் பெயராம். இத்தகைய பகவானுக்குச் செய்யும் பக்தி எதுவோ அது பகவத் பக்தி என்ப. இது இறைவரின் இயைபுடையவன் யான், இவ்விறையவர் என்னவர், இவ்விறையவர்யானே எனமுத்திறப்படும். முதலது மிருது என்பர். இடைப்பட்டது மத்தியமமென்பர். கடைப்பட்டது அதிமாத்திரம் என்பர். அகம் பிரஹ்மாஸ்மியென்னு மிவ்வதிமாத்திர பக்தியை அனுட்டித்தவர்பால் நீ சமீபத்தே யொருகாலுஞ் செல்லாதே. ஆனல் அத்தகைய பக்தனைத் தூரத்தில் விட்டுச்செல்லுதிஎனத் தூதனை நோக்கி எமராஜா கூறினதாகச் சுருதியாதிகள் கூறுகின்றன. இப்பக்தியின் முத்திறத்தைப பக்திரசாயனமென்னு நூலில் ஸ்ரீமதுசூதனசாஸ்வதி என்ற பெரியார் விரிவாய் விளக்கியுள்ளார். ஆங்குணர்க.



மும் வாசிட்ட முதலிய சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. சகலரும் இந்தத் 149 தத்துவங்களை விசாரம்பண்ணி மோக்ஷமடையக்கடவர்.

நாநாஜீவவாதக்கட்டளை

முற்றிற்று.

148, பிராஹ்மணன் - பிரஹ்மத்தை யுணர்ந்தவன் பிராமணன்.

149. தத்துவம் - உண்மை; பதார்த்தம்.





உ

ஓம் தத்ஸத்.

ஓம் ஸ்ரீமஹா கணேசசாரதாசத்

குருப்யோ நம:

# ஸ்ரீ குர்வஷ்டோத்தரசத நாமாவலி.



ஓம் ஆநந்தவபுஷே நம: (1)
,, ஆசார்யாய நம:
,, ஆதிமத்யாந்தரஹிதாய நம:
,, தயாநிதயே நம:
,, சத்யஜ்ஞாநாநந்தரூபாய நம:
,, சதாசாராய நம:
,, யோகயோநயே நம:
,, ப்ரஜ்ஞானகநாய நம:
,, பஞ்சகோசவிலக்ஷணாய நம:
,, கோடிகந்தர்ப்பசுந்தராயநம: (10)



ஓம் க்ருபாவீக்ஷணாய நம:
,, அதநவே நம:
,, அநந்தாய நம:
,, அஜாய நம:
,, இச்சாநிச்சாவிரஹிதாய நம:
,, அபோக்த்ரே நம:
,, அத்வந்த்வாய நம:
,, அசிந்த்யாய நம:
,, குணத்ரயவிவர்ஜிதாய நம:
,, குஹாசயாய நம: (20)
,, ஜ்ஞாத்ருஜ்ஞாநஜ்ஞேயசாக்ஷி
ணே நம:
,, நிரஞ்சநாய நம:
,, நித்யபுத்தாய நம:
,, அக்ரகண்யாய நம:
,, அக்ஷராய நம:
,, உதாசீநாய நம:
,, உபதேஷ்ட்ரே நம:
,, அமலாய நம:
,, ஜ்ஞாநதேசிகாய நம:

ஓம் தத்வமஸ்யாதிவாக்யார்த்தலக்ஷ்யாய நமஃ (30)
,, நிஷ்களாய நமஃ
,, தாரகாய நமஃ
,, தத்வபோதகாய நமஃ
,, நித்யசுத்தாய நமஃ
,, நித்யமுக்தாய நமஃ
,, ஜ்ஞானலிங்காய நமஃ
,, ஸ்வயம்ப்ரகாசாய நமஃ
,, ஜன்மஜராம்ருத்யுநிவாரகாய நமஃ
,, நிர்லேபாய நமஃ
,, அத்புதசாரித்ராய நமஃ (40)
,, அத்வேஷ்ட்ரே நமஃ
,, ஊர்த்வரேதஸே நமஃ
,, ஸதஸத்விரஹிதாய நமஃ
,, ஸாதுகம்யாய நமஃ
,, ஸர்வாத்மனே நமஃ
,, சாந்தாய நமஃ
,, அநந்தசக்தயே நமஃ
,, நிஷ்ப்ரபஞ்சாய நமஃ



ஓம் ஈச்வராணுமதீசாய நமஃ
,, வேதாந்தவேத்யாய நமஃ (50)
,, ஷடூர்மிவர்ஜிதாய நமஃ
,, ஷட்பாவரஹிதாய நமஃ
,, அம்ருதாய நமஃ
,, அந்தர்யாமிணே நமஃ
,, அபரிச்சேத்யாய நமஃ
,, க்ஷமிணே நமஃ
,, கூடஸ்தாய நமஃ
,, கைவல்யதாயகாய நமஃ
,, கபடவர்ஜிதாய நமஃ
,, காலாதீதாய நமஃ (60)
,, அவஸ்தாத்ரயசாக்ஷிணே நமஃ
,, அப்ரமேயாய நமஃ
,, அத்வயாய நமஃ
,, அவ்யக்தாய நமஃ
,, கூடாய நமஃ
,, க்ரந்தித்ரயவிமோக்ஷணாய நமஃ
,, சின்மாத்ராய நமஃ
,, ஜ்ஞாநகம்யாய நமஃ

ஓம் ப்ரஹ்மாநந்தாய நம:
,, பவாப்திதாரணாய நம: (70)
,, பராத்பராய நம:
,, தத்வமர்த்தாய நம:
,, துஷ்டதூராய நம:
,, தூராசாரநாசநாய நம:
,, ஆபாஸ்வராய நம:
,, விதிவிஷ்ணுசிவாக்ருதயே நம:
,, அசல்லக்ஷணவிலக்ஷணாய நம:
,, அஜடாய நம:
,, அபாரசம்சாரார்த்த விகட்டநாய நம:
,, அமன்யவே நம: (80)
,, அமோகவைபவாய நம:
,, அபயங்கராய நம:
,, வரதாய நம:
,, முக்திரூபாய நம:
,, சாச்வதாய நம:
,, அகண்டமஹிமாம்போதயே நம:
,, அகண்டபோதாய நம:

உ

ஓம் மகாகணபதயே நம:

ஸ்ரீ ஜகந்நாத பண்டிதராஜ ரருளிய

# ஸ்ரீ கங்காலகரி

மூலமும் - உரையும்.

இவை

தேவகோட்டை ம-௱-௱-ஸ்ரீ, அரு, அரு,
சோம, கல்கத்தாக்கடை ஏஜண்டு
K. சுவாமிநாதஞ்செட்டியாரவர்களின்
பொருளுதவியால்,

வேதாந்தபாஸ்கரரும்
நியாயசந்திரருமாகி விளங்கும்
ஸ்ரீ வீரசுப்பய்ய சுவாமிகள் அவர்களால்

சென்னை
ஸ்ரீ கணேச அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பெற்றன.
1918.

---



விலை அணா 2.

உ

ஓம் மகாகணபதயேநம:

# ஸ்ரீ கங்காலகரி

## மூலமும் - உரையும்.

---

### மங்கலம்.

சிந்துரவதன! செல்வச்சிறுவ! நின் றிருத்தாள் சேர்ந்த, மந்திரமுனிவர் பொற்றாண் மகத்துவத் தூளியன்றோ, புந்தியிற் புகுந்தகங்கை பொலங்கழல் போற்றுமாறு, சுந்தரத் துணைதானல்ல சொல்வள னீவதற்கே.

---

### மங்கலம்.

நிகிலவுலகங்களுக்கு மிகவழகைப் பொழிசீர் நிகழ்த்துவதற் கரிதாகி யாடலென வெளிதாய், நிகிலமுழுவதும் பயந்த கண்டபர சுடையோன் றிருமல

மன் மகத்தான செல்வமுமே யாகி, நிகமமுறும் விழுப்பொருளாய்ப் பொரு ணிறைந்த சுரர்க்கோ நித்தியமெய் யுடையதிருப் புண்ணியமே யாகும், நிக ரறுநல் லமுதமென நிறைந்த சவுந்தரிய நின்சலில மமங்கலத்தை நீக்குக வெங் தமக்கே.

(உரை.) ஹே கங்காதேவியே! சகல புவ னங்களுக்கும் அபாரமான அழகைத்தரும் உரைத்தற்கரிய சிறப்பையுடையதும், விளை யாட்டாகச் சகல வுலகங்களையும் படைக்கும் பகைவரைத் துடைக்கும் பாசுடைய ஸ்ரீமங் மகாதேவரது அபரிமித செல்வமும், வேதம் புகழும் நிறைதனமும் தேவர்களுடைய சரீர சகிததருமமும், அமுதம் போலும் சௌந்தரியம் நிறைந்ததும் ஆகிய உன்னு டைய தீர்த்தமானது எங்களுடைய அமங் கலத்தை நீக்கி மங்கலஞ் செய்க. (1)

[பிரவாக ரூபமாகத் தீர்த்தத்தைப் புகழ்ந்து தங்கருத்தை வேண்டிக்கொளல்.]



2. வறியவர் வறுமை தன்னையு மலின வாதனை யுளர்பவத் தினையுஞ், சிறிதொரு முறையும் விழிநெறி படரச் சேய்மையிற் செய்ததி விரைவில், செறி யறி யாமை மரமறத் தீக்கைத் தேசிக ரெனுநின தறலின், உறுபிர வாக மிஃ தளவிலதா முயர்விவண் செய்கவெங் தமக்கே.

(உரை.) ஹே மந்தாகினியே! தரித்திரர்க ளுடைய தைன்னியத்தையும், துர்வாசனை யோடுகூடிய மனத்தினர்பாவத்தையும்அவர் ஒருமுறை தரிசித்தமாத்திரையானே அதி விரைவில் அதிதூரத்திற்போக்கி,அவ்வாறே அவித்தைமரங்கெட வுபதேசிக்குந் தேசிக ராய்வரும் உனது வாரிப் பிரவாகமாகிய இது இங்கு எங்கட்குக் கணக்கற்ற மேன் மையைச் செய்விக்கவேண்டும். (2)

[தரங்கவடிவமாகத் தீர்த்தத்தைப் புகழ்ந் து ஆசிர்வதித்தல்.]

3. அரன்வெளிக் கபடங் கண்டுதிய ருக்க னனையவைங் கரனனை கடைக்கண்

டிரமுறக் கணங்கொள் கலக்கமிக் கரன்
றன் றிருமுடி தனிலலை வனவாஞ், சுர
நதி சுரந்து பரந்தெழு மலைகள் சுந்தரி
நின்பதம் பரவும், நரகுறு பவத்தைட
பயத்தினை யகற்றி நண்ணுக வெனக்கரு
டாயே

(உரை.) அடியேனுக் கருளுந்தாயே ! ஸ்ரீமந் மகாதேவரது வெட்ட வெளியான வஞ்சகத்தை நோக்கி ஸ்ரீகணேசப்பெருமானது அன்னையின் உதயமான சூரியனைப் போற் சிவந்த கடைக்கண் சிறிது நிலைபெறவே சிறிது நேரம் இருதயத்திலுண்டாய கலக்கம்மிகுந்து சிவபிரான் றிருச்சிரசில் வாடியாடும் நின்னிடத்தி னின் றுமுண்டாய அலைகள், உனது திருவடியைப் பணியும் அன்பர்களுடைய பாவத்தையும் பயத்தையும், போக்குக. (3)

[நின்னைப்பற்றி யான் எல்லாத்தேவரையுந் துரும்பென நினைந்தேன், இப்போது நீ யெனக்கருள்செய்ய உபேக்ஷிக்கின் யான் யாவர்முன்னழுவேன் எனல்.]



4. ஆதர முனைக்கொண் டிலங்கதி
கருவ னாகியே யாய்விலா தமர, ரோதனை
வரையு மவமதித் திருந்தே னுன்பதம்
பரவுமிப் போழ்து, நீதிருக் கருணை
செய்திலை யாயின் நிமலபா கீரதி யமு
தே, ஆதர விலனா னம்மையே யந்தோ!
அழுவதிங் கெவர்முனே யறையாய்.

(உரை.) ஹே பாகீரதியாகியதாயே ! நின்னைச் சரணாகதியாய்ப்பற்றி விளங்காநின்ற மிகக் கருவங்கொண்ட யான் விசாரஞ்செய்யாமல் எல்லாத் தேவர்களையும் அவமதித்தேன் ; இப்போது நீ கருணை செய்யாமற் கைவிட்டு விடுவையாயின் ஆதரவில்லாத யான் அந்தோ யாவர்முன் சொல்லியழுவேன். (4)

[மீண்டும் பிரவாக ரூபத்தை நினைந்து பாவ நீக்கத்தைப் பிரார்த்தித்தல்.]

5. அறஞ் செயாக் கொடிய ராயினு
நினைக்கி னருக்கனல் லொளிக்குழு விரு
ளைப், புறஞ் செயல் போல வுள்ளிருள்
போக்கிப் பொன்னுல கெவருமே போற்

ற்ற, நிறஞ் செயு மறலின் வடிவமாய்
நிகழு நின்றி ந வெள்ளமெய் மூர்த்தம்,
இறைஞ் சென துளத்தின் றழலையும்
பாவவினத்தையுங் குனித்தரு ளுகவே.

(உரை.) ஹே மந்தாகினித்தாயே! புண்
ணிய மியற்ருத மகாபாதகராயினும் சிந்திக்
கின் சூரியனது கிரணங்களின் கூட்டமா
னது அந்தகாரத்தை நீக்குவதேபோல மன
திலிருக்கும் அஞ்ஞானத்தை நீக்கிச் சகல
தேவர்களாலும் பூசிக்கத்தக்க அழகுபொருந்
திய நீர்மயமாகிய பிரவாகரூப நின் றிவ்யமங்
களமூர்த்தம் நின்றிருவடியையே தொழு
மெளியேனுடைய மனத்தாபத்தையும் மன
வாக்குக்காயங்களாற் செய்யப்பட்ட பாவத்
தையும் நீக்கியருளுக. (5)

[இராஜ்யத் தியாக பூர்வகமாக நினது
கரையில் வசித்து நினது தீர்த் தத்தைப்
பானஞ்செய்தலா லுண்டாமானந்தம் தன்
னினுங் குறைந்த இன்பமாகிய மோக்ஷத்
தைப் பரிகசிக்கின்ற தெனல்.]

6. எனைத் தருந் திருவே! யெறிகட
லாடை யிம்பரைப் புரந்தமன் னவரும்,



தனித் துரும்பென முற்றினும் விடுத்தரி
யாற் சலிக்கும் வஞ்சிக் கொடி படர்ந்த,
பனித் திருக் கரையிற் றவம்புரி பவ
ராய்ப் பன்னமு தினுமிகு சுவைகான்,
றினித்தநன் னீரைக் களம்வரை மாந்த
வெழுஞ் சுக நகைக்குமுத் தியையே.

(உரை.) என்னை யீன்றருளிய மாதாவே!
கடல்சூழ்ந்த பூவுலகை யாண்ட மன்னவர்
தமதரசியிற்கையைத் துரும்பென விகழ்ந்து
அத்தியந்தம் விடுத்துக் காற்ருலசைந்தாடும்
வஞ்சிக்கொடிகள் சூழ்ந்து நிறைந்த நினது
குளிர்ந்த கரையில் தவம்புரிபவராகித் தேவ
அமுதினும் அதிக சுவையோடுகூடி யிரா
நின்ற மிக நின்மலதீர்த்தத்தைத் திருப்தி
யாகப் பானஞ்செய்தலாலுண்டாம் இன்பம்
மோக்ஷ இன்பத்தை நகைசெய்கின்றது. (6)

[நேரே. தான் றீர்த்தமாடாவிடினும் நின்
பால் மற்றொருசம்பந்தத்தால் தன்னவயவம்
வீழின் அவைகட்கும் மேலான வுலகஅடை
வுண்டாமாயின் நேரேதீர்த்த மாடுபவர்க்குக்
கூறவேண்டிய தென்னே யெனல்]

7. அன்னையே புலரு முன்னரே தீர்த்த மாடிடு மரச சுந்தரிக ளுன்னதத் தனத்தின் மன்னுமான் மதந்தா னுன்னுடன் விரவிய கணமே, அன்னவை கவின்வைமா னிகர்நூ ருடாயிரக் கணக்கினர் சூழப்,பொன்னுடல்படைத்தின் னந்தன வனத்திற் புகுந்திடு மிச்சையின் வயமே.

(உரை.) ஹே மாத! சூரியோதய மாகு முன்னரே தீர்த்தமாடும் இராஜ சுந்தரிகளின் மலைபோன்ற முலைமேல் அணிந்திருக்கும் கஸ்தூரிமுதலியவை நினதுதீர்த்தத்திற் கலந்த அந்தக் கணத்திலேயே, அக்கஸ்தூரிமுதலியவற்றைக் கொடுத்தமிருகங்கள், அழகிய விமானத்தில் வரும்நூறுயிரக் கணக்கான தேவர்கூட்டம் சூழப் பொன்னுடலுடனே சிறப்புப்பொருந்திய இந்திரது நந்தவனத்திற்புகுந்து இச்சைப்படி சஞ்சரிக்கும். (7)

[ஒருமுறை நினைத்தபோதினும் மனச்சாந்தியையும், ஒருதரங் கானஞ்செய்தமாத்திரையானே பாப சமுசார தாப நீக்கத்தையும் செய்விக்கும் கங்கையென்னும் பதம் மரணசமயத்தில் எனது முகத்திலுலவுக வெனல்]



8. ஒருமுறை நினைந்த போதினுமுளத்தை யொள்ளிய சாந்தம தாக்கி, யொருமுறை பிரிய கானமே புரியினெல்லையி லவம்பவக் கனறீர்த், தருள்செவி மடுப்பவாநந்தந் தருவ தாகிய கங்கையென் பதந் தான், மரணம துறுமப் பொழுதினி தாக மரைமுகத் துலவுக தாயே!

(உரை.) ஒருதரம் நினைத்த போதிலும் மனச்சாந்தியையும் ஒருமுறைஅன்போடுஞ் சபஞ்செய்யில் விரைவாகப் பாவத்தை சமுசார தாபத்தைத் தவிர்த்தலையும் செய்வித்தருளா நின்றதும், கேட்டமாத்திரையானே செவிக்கும் மனதிற்கு மின்பந் தருவதும் ஆகிய கங்கையென்னும் பதமானது உயிர்போகும் பொழுது இனிமையாக எனது வதன தாமரையின்கண்ணே உலவிக்கொண்

டிருக்குமாறு, ஹே அன்னையே நீயருளல் வேண்டும். (8)

[இந்திராதி உத்யான வனத்தைக் குறித் திக் காகங்கட்கும் மிகப் பிரியமாகிய நினதி கரை யெனது சிரமத்தை நீக்கு மாற்ற லுடைய தாகுக வெனவேண்டல்.].

9. எக்கரை யிடையி லாடிடுங் காக
வினமிக மகிழ்வன வாகிச், சொக்கவிந்
திர ரினகரவா வுளத்திற் றெடர்புறு
வசித்தலா னுலகர்க், கிக்கரு வடைதன்
மரித்திட லிடரை யெய்திடன் முதலன
வேகும், அக்கரை நினதிங் கெனதிளைப்
பகற்று மாற்றலை யடைகுக வீனயே.

(உரை.) ஹேதாயே! எந்தத்தீரத்தின் மத்தியில் விளையாடாநின்ற காகக்கூட்டம் அதிக சந்தோடத்தோடு கூடினவாகி; இந்திரரது நகர இச்சையையு முள்ளத்திலடைய மாட்டாவோ, எக்கரையின்கண் வசித்தன் மாத்திரையானே உயிர்கட்கு ஜனனமும் மரணமும் சோகமும் அடையமாட்டாவோ, அத்தகைய மகாமகிமைவாய்ந்த நினது தீர



மானது ஈண்டு என்னுடைய சிரமத்தை நீக்கும் சமர்த்துடையதாகுக. ஒருகால் விமானத்தில் வந்த இந்திரர் ஸ்ரீகங்காதீரத்தில் விளையாடும் காகங்களை நோக்கி நீங்கள் விளையாட என் னந்தன வனத்திற்கு வாருங்கள் என அழைப்ப நாங்களிவ்விடத்திலேயே வசிப்போம் உமது வனத்திற்குவரோம் என்றன வென்பது ஸ்ரீகங்கைபுராணத்தின்கண்ணே வெளியாம். (9)

[யாவினும் மேலாயதும், வேதாதி யகோசரமும் ஆகிய பரமசிவத்தை விடுத்து நீ வாஞ்சித்தபயன் பெறுவதற்கு என்னையே யேன் றுதிக்கின்றனையெனின்? அத்தகைய சிவம் நீயேயாவாய் வேறு விடயங்களல்லை யெனல்.]

10. நேருறை மறையு நிகழ்த்திடா
விருமை நிகழ்ந்திடா நிகிலரின் மனமு,
மோருரை யதுவுந் தொழில் செயாத்
தூய வோருரு வின்றியே யழியாப்,
பேராறு மெதுதன் மகிமையாற் றமத்
தைப்பெயர்த்திடும் பெருஞ்சுர ரமுதே,

யேருறு மதுரீ யேயல திகழு மிவ்விட
யக்கடு வலேயே.

(உரை.) சாக்ஷாத்வேதமும் கூறவொண்ணுததும், பேதம் சிறிதுமில்லாததும், சருவ உயிர்களின் மனவாக்கு வியாபாரங்கட்கு அவகாசமற்றதும், பரிசுத்தமாயதும், ஆகாரமற்றதும், நித்தியமாயதும், பெயரற்றதும் ஆகிய எவ்வத்துத் தனது சயம்பிரகாச மகிமையானே அஞ்ஞானத்தைக் கெடுக்குமோ, அவ்வழகியவத்து, ஹே சுரரமுதமாகியதாயே! நீயேயாவாய், அஃதலாமல் இவ்விடயவிடங்கள் நீயாகாயெனல் திண்ணம். (10)

[யாவருக்கும் பொதுவாக அத்தியந்தங் கிடைக்காததாகிய ஸ்ரீ விஷ்ணு பதத்தைக் கொடுக்கும் நீ எவரோடு முவமிக்கப்படமாட்டாயெனல்.]

11. அரிய தானங்க டம்மினு னிட்டையா லரும்பல மகத்தானும், பெரிய வச்சஞ்செய் நிருமலத் தவந்தமாற் பெற்றிட முடியாத, விரியுஞ் சிந்தியமின்றிய விண்டுவின் வியன்பதந் தனைத்



தாயே, சரிய தாகவீ யெவரொடிங் குவமிக்கத் தக்கவ ளருணீயே.

(உரை) மகத்தாகிய தானங்களானும், தியாநுதிகளானும் அரிய பெரிய பல்வகையாகங்களானும், பார்க்கப் பயங்கரமாகிய நின்மலமான தவக்கூட்டத்தானும், அடைவதற்கருமைத்தாய, அசிந்தியமாய, ஸ்ரீ மகாவிஷ்ணுவின் பதத்தை யாவருக்குஞ் சமானமாகக் கொடுக்கும் உன்னை, ஹே அன்னையே! இங்கு யாவரோடு உவமிப்பது எங்கட்குத் தெரியவில்லை நீயே கூறுவாயாக. (11)

[தரிசனமாத்திரையானே நரர்க்குச் சமுசார பயத்தைக்கெடுக்கும் நின்னை ஸ்ரீபரமசிவன் ஸ்ரீபார்வதி தேவியாரின் அனுகூலத்தியாகவாயிலாக நிரந்தரம் திருமுடியிலேயே வைத்தருளியுள்ளாரெனல்.]

12. கண்ட மாத்திரை யானுமே நரர்க்குறுங் கடும்பவப் பய நீக்குங், கொண்ட கோபத்திற் கோணிய வுமைக்கனுகூலமேல் விடுநீல, கண்டன் சிர்சிரத் திடைபெறத் தரித்திடுங் கவினின் மெய்

மகி மாவை, விண்டு பேசுவ ரெவரிவண்
மங்கல விமலையே யெம தாயே.

(உரை.) தரிசித்தமாத்திரத்தானுமே நரருடைய சமுசாரபயத்தை நீக்கியருளுவதும் ஸ்ரீபார்வதிதேவியார் மனதிற்கொண்ட கோபத்தானேவதனஞ்சுருங்கியும், அவர்க்குயர்வாகிய அனுகூலஞ் செய்வதைவிடுத்து ஸ்ரீநீலகண்டராகிய எந்தை தமது திருமுடியில் நிரந்தரம் வைத்தருளுவதும், ஆகிய நினது மங்கலமூர்த்தத்தின் மகிமையை யாவரே யெடுத்துரைப்பவர்? (12)

[உன்மத்தாதிகளானும், இகழத்தக்கனவும், பரிகசிக்கத்தக்கனவும், கூறத்தகாதனவும் ஆகிய பாவங்களையுங் கெடுப்பவள் நீயேயெனல்.]

**13.** பித்தரு மிகவு மிகழ்வன பதிதர்
பெரிதொறுப் பனவிரத் தியரும், ஒத்
திரை தருவ வல்லனபுளகத் துடன்விடு
வனபுற முரைக்கு, மத்தரு மளவி லுல
கரி னளவின் மறங்களைத் தினஞ்சலிப்
பிலாம, வித்தரை யிடையி லொருத்தியே
நீக்கி யிலங்குவை யென்குறை பெரிதோ.



(உரை.) உன்மத்தர்களாலும் மிகவுமிகழப்பட்டனவும், கீழோராலும் நீக்கத்தக்கனவும், பாமரராலும் பகரத்தகாதனவும் புறங்கூறுவோராலும் மயிர்ச்சிலிர்ப்புடன் விட்டொழிக்கப்படுவனவும் ஆகிய அளவில்லாதவுலகரின் அளவில்லாத பாவங்களை நாடோறும் மனம்வெறுக்காமல் இப் பூவுலகின்கண்ணே நீயொருத்தியே நீக்கி விளங்குகின்றனையாதலின், என்னன்னையே! எனதுபாவ முனக்குப் பெரிதோ. (13)

[மண்ணின்கண்ணே இடர் களையும்பொருட்டுச் சுவர்க்க வுலகத்தினின்றும் இறங்குமுன்னைச் செஞ்சடையிற்றரித்த சிவபெருமான் நிர்லோபராயிருந்த போதினும் உன்னைமறைத்தலானே லோபியாய் விட்டமையின் நின் குணங்கட்கிஃதே ஒருகுறையுள தெனல்.]

**14.** வானுலகி னின்றிடர் களைந்திட
வும் வந்தனை யிம்மண் ணுலகினீ, கூனி
லவு செஞ்சடையின் புஞ்சமுடி கொஞ்
சு திபுரஞ் சிதைவரான், கோனெதுவிரும்

16 இயற்கையிற் றெளிந்து சகசசீ
தளமா யெழில்செய்நின் புனலினைச்
சகரர், புயற்கிறை யுலகிற் புக்கிருந் திரி
யாப்பொன்னொளி மேனிய ராகிச், செ
யற்கையை நினைந்து மிகுபுள கிதராய்த்
தினமினு மகிழ்வொடும் புகழ்வர், அய
ற்கரை யறுமவ் வறையொணு மகிமை
யவனியின் மலர்ந்திடு மன்னையே.

(உரை.) ஹே அம்பிகையே சுபாவ
மாகவே நிருமலமாகிச்சகஜமாக சீதளமாகிய
உனது தீர்த்தத்தை, மேகநாயகராகிய இந்தி
ரரது உலகம் புகுந்திருந்து வாழ்பவரும்,
கெடாத பொன்னொளி மேனிபெற்றவரும்,
அப்புனல் செய்த செயற்கையை யெண்ணி
மிகவு மயிர்க்கூச்செறிதலை யடைந்தவரும்
ஆகிய சகரராஜாவின் மைந்தர் மகிழ்வோடு
மின்றும் புகழ்கின்ற யாதொரு கரையு மில்
லாத கூறுதற்கரிய அந்நினது மகிமையா
னது இப்பூமண்டலத்தில் ஜெயம்பெற்று
விளங்குகின்றது. (16)

[அற்பப் பாபியரின் பாப நீக்கப்பொரு
ட்டு மூவுலகிலும் அநேக தீர்த்தங்க ளிருக்



கின்றன; பிராயச்சித்தமின்றிய மகா பாதக
தோடத்தை நீக்குவதில் நினக்கொப்பாய்
நீயே யாவாயெனல்]

17. செயற்பினர் விரைவிற் செங்க
னல் பரப்புஞ் சிந்தையர் சிறியபா விய
ரை, யுயப்புரி நதிகள் பலவுள மூவிவ்
வுலகினின் மாற்றிடு நெறியே, அயற்
பிற வாம லஞ்சுபா வியர்தம் மகங்கெட
வளிப்பவ ரமையே, கயற்பொலி யுனை
யொத் துன்னையே யலது கவின்பெற
விளங்குவ ரெவரே.

(உரை.) ஹே உலகீன்றதேவியே! பாவ
ஞ்செய்த பின்னுடனே மனமனவிட்ட புழு
வேபோற்றபிக்குஞ் சிறிய பாவியரைக் காக்
கும்பொருட் டிந்த மூன்றுலகத்தில் அநேக
தீர்த்தங்க ளிருக்கின்றன; ஆனல் யாதொரு
பிராயச்சித்தமுஞ் செய்யமுடியாத கொடிய
பாவமுடையவர் தம்பாவம் போக்கிக் காத்த
ருள உன்னைப்போல நீயேயாவாயல்லாமல்
வேறுயாவருள்ளார். (17)

[அநேக குணங்களோடு கூடியிருக்குந் தகைமையானே பாவத்தைமாற்றும் ஆற்றலுற்ற நினது திருமேனியானது எனது பாவத்தையும் ஏகுமாறியற்றுக வெனல்.]

18. புண்ணியந் தமக்குத் தானமா யெஃதோ புதிதுகாண் முதர்தமக் குதவி, யொண்ணதி தமக்குண் முக்கிய மாய்மூன் றுலகினுக் கமலமார் கலையாய், நுண்ணிய மதியிற் கற்பனை நூறி நுணங்கிய மதிக்கரி தாகி, புண்ணிதி யளித்துக் காக்குமுன் மேனி யொருங்கென தகமகற் றுகவே.

(உரை.) தருமங்கட்குத் தானமும், புதிதாகவந்து தரிசனம் புரிபவர் மனத்திற் சொல்லமுடியாத அற்புதத்தை விளைவிப்பதும், தீர்த்தங்களுக்குள் முக்கியமும், மூவுலகினுக்கும் நிருமலமாகிய வத்திரம்போன்றதும், மதிக்குச் சமாதானஞ் செய்விப்பதும், குமதிக்குத் தரிசனமாத்திரமுமிலாது மறைவதும், இலக்குமியைத் தேடித் தருவதும், ஆகிய உனது திருமேனியானது எனது தாபமாகிய பாபத்தை யகற்றியருளுக. (18)



[காரியப் பற்றுனே நினது பிரிவுண்டாயது, இஃதென தபராதமேயாம் எனல்.]

19. தனநறை மாந்திச் சுழல்விழி யிறைவர் தங்கண்முன் னோடிமிக்கோடி, யினவனற் கொடிய துயருழன்றநிச மிருக்குமென் னுடையதே மாசா, மெனதிதஞ் சதங்கொன் றுணர்விலா மதிய னெழின்மிகு நினைப்பிரிந் திருந் தேன், இனியிறை யேனுந் தயைசெயல் வேண்டு மென்றனை யீன்றவ ளன்றோ?

(உரை.) திரவியமாகிய கள்ளைக்குடித்துச் சுற்றுநின்ற கண்களையுடைய மன்னவர் முன்பாகக் கைகட்டியோடியோடி அநேகங் கொடுந்துயரடைந்து நிரந்தரம் வாடுமெனது தோடமேயிதுவாகும்; அடியேனுக்குக் கிடைக்கும் அநேக இதங்களையுமிழந்து அவிவேக மதியனாகிய யான் அழகுபொருந்திய உன்னைப் பிரிந்திருந்தேனன்றோ! இனிக் கணமேனும் தயைபுரிய வேண்டும், நீ யென்னைப் பெற்ற தாயல்லவா? (19)

[முன்னர் தயை செய்யவேண்டு மெனப் பட்டது இப்போது எவ்விடயமாகிய தயை யென அவாவின் நின்தீர்த்தமானது அடி யேனது மறுபிறப்பையே தூரத்ததாக்குக வெனப் பிரார்த்தித்தல்.]

20. வாயு லீலைசெய் லோல லகரியால் வாச லீலை கொள் வாரிச ராசியி, தூய தூளியி ராசி கண்மே னியிற் ஞேய நீடொளிக் குங்குமக் காந்திசேர், தாயர் வானவர் தந்தனந் தந்தகார்ச் சந்தனக் குழம்பாற் சடிலப்படுஞ், சாயை சைவலஞ் சார்நின தந்தணீர் சன்ம சால மெனதறச் சாடவே.

(உரை.) வாயுவினுடைய விலாசத்தானே சஞ்சலப்படும் அலைகளால் அலையுந் தாமரைக் கூட்டங்கொட்டும் மகரந்தங்கள் திருமேனியிற் ஞேயப்பெற்று விளங்காநின்ற குங்குமப் பிரகாசத்தோடு கூடியதும், வானுலகத்திருக்குந் தாய்மார்கள் மார்பிலணிந்த கருஞ் சந்தனக்குழப்புகள் வீழ்ந்து சேருக இருப்பதும், படர்ந்த பாசிகள் நிறைந்ததும்



ஆகிய நினது குளிர்ச்சிபொருந்திய தீர்த்தம் எனது ஜனனக்கூட்டத்தை முற்றினும் நீக்கியருள்க. (20)

[உற்பத்தி வாசத்தான விசேடத்தானும் தொழில்விசேடத்தானும் உலகைக்குறித்து உனக்கு மேன்மையுளதெனல்.]

21. உதயமோ பதுமை முதன்பத பதுமவொலி மலமில நகமிருந்தாம், வதிதலோ மதன்றன் மதனன் செஞ் சடையில் வனைதரு புனிதமேன்மாடி, அதமொடு பதிதரவர் தமைப்புரத்தல கர்நிசந் தொழிலிதுவாயின், எதுதனு லுலகினின்று நின்மேன்மை யெழில் பெறு திருந்திடுந் தாயே.

(உரை.) இலக்குமியோடு இரமிக்கும் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் பாததாமரையின் புகழும் நிர்மல நகங்களினின்றும் உண்டானாய், மன்மதனைப் பொடிசெய்த கருணாநிதியின் செம்பவளச் சடையின் கட்டாகிய மேன் மாடிவீட்டில் வாசஞ்செய்கின்றாய், பிராயச் சித்தஞ்செய்யமுடியாத மகாபாதகர்களையுங்

